ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 13

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் வெளியீடு]

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ, பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

**10–10–1949**

விரோதி-௵ புரட்டாசி-௴

ஸ்ரீ:

## எம்பெருமானாரும்—தனியன்களும்

ஆழ்வார்களருளிச் செய்த ஸகல திவ்யப்பிரபந்தங்களுக்கும் தனியன்கள் அநாதி காலமாகவே அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன. சில பிரபந்தங்களுக்கு ஒன்றிரண்டு தனியன்களும் சில பிரபந்தங்களுக்கு ஐந்தாறு தனியன்களும் அமைந்திருக்கின்றன. நம்மாழ்வாரருளிய திருவாய்மொழியாயிரத்திற்கு ஸம்ஸ்க்ருதத்தனியன் ஒன்றும், தமிழ்த் தனியன்கள் ஐந்துமாக ஆறுதனியன்கள் உலகமெங்கும் அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன. மாறன் பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கங்கூறவவதரித்த திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழியாயிரத்திற்கு ஸம்ஸ்க்ருதத் தனியன் ஒன்றும் தமிழ்த் தனியன்கள் மூன்றுமாக நான்கு தனியன்கள் அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன.

பெரும்பாலும் தனியன்களில் அந்தந்த திவ்யப்பிரபந்தங்களின் பெருமை, அவற்றை யருளிச் செய்தவர்களின் பெருமை, அவர்களவதரித்த தலத்தின் பெருமை முதலியன சொல்லப்படுகின்றன. திருவாய்மொழித் தனியன்களில் ஒன்றும், பெரிய திருமொழித் தனியன்களில் ஒன்றும் வெகு விலக்ஷணமாக அவதரித்திருக்கின்றன. திருவாய்மொழித் தனியன்களில்

“ஏய்ந்த பெருங்கீர்த்தி யிராமாநுச முனிதன்
வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்—ஆய்ந்த பெருஞ்
சீரார் சடகோபன் செந்தமிழ்வேதந் தரிக்கும்
பேராத வுள்ளம் பெற.”

என்கிற தனியனானது எம்பெருமானார் திருவடிகளிலே பண்ணுகிற வொரு பிரார்த்தனையாக அமைந்திருக்கிறது. இந்த வெண்பாவின் பொருளாவது, மிகச்சிறந்த கல்யாண குணசாலியான நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழியாயிரத்தை நன்கு தரித்துக் கொள்ளவல்ல நெஞ்சுதன்னைப் பெறுவதற்காக பெரும்புகழ்படைத்த எம்பெருமானாருடைய திருவடித்தாமரைகளை வணங்குகின்றேனென்பதாம். ஸ்வாமிந்! எம்பெருமானாரே! திருவாய்மொழியாயிரத்தையும் மறவாமல் தரிக்கத்தக்க ஸாமர்த்தியத்தை வரப்ரஸாதமாகத் தந்தருளவேணுமென்று அவர்தம்மையே நோக்கிப் பிரார்த்திக்கிறபடியாகத் தேறுகின்றது.

பெரிய திருமொழித் தனியன்களுள்,

> **"எங்கள் கதியே யிராமானுச முனியே!**
> **சங்கை கெடுத்தாண்ட தவராசா!—பொங்குபுகழ்**
> **மங்கையர்கோ னீந்த மறையா யிரமனைத்தும்**
> **தங்குமனம் நீயெனக்குத் தா."**

என்கிற விந்தத் தனியனும் இதேரீதியாக அமைந்திருக்கின்றது. இது எம்பெருமானாரை முன்னிலைப்படுத்தியே கூறியுள்ளது. திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழியாயிரத்தையும் தரிக்கவல்ல மனத்தைத் தந்தருள வேணுமென்று எம்பெருமானாரை நோக்கிப் பிரார்த்தித்திருக்கிறது இதில்.

ஆக இவ்விரண்டு தனியன்களையும் விசேஷித்து மனத்தில் மனனம் செய்யுங்கால் தனிச்சிறப்பு வாய்ந்த வொரு பரமானந்தம் விளைவதோடு எம்பெருமானாருடைய ஒப்பற்ற வொரு பெருமையும் அறியலாகிறது. பிரபந்தங்களைத் தரிக்கும்படியான நெஞ்சைத் தந்தருள வேணுமென்கிற பிரார்த்தனையை அந்தந்த ஆழ்வார்களை நோக்கியே செய்திருக்கலாம்; அவர்களுக்கு அந்தரங்கர்களான மதுரகவிகள் ஸ்ரீமந்நாத முனிகள் போல்வாரை நோக்கியாவது செய்திருக்கலாம்; பரமோதாரனை எம்பெருமானை நோக்கிச் செய்திருக்கலாம். ஸகலவித ஸம்பத்துக்களையும் அளிக்கவல்ல பெரிய பிராட்டியாரை நோக்கிச் செய்திருக்கலாம். [இராமாநுச நூற்றந்தாதியின் ஈற்றுப்பாசுரத்தோடு மிகப்பொருந்துமிது.] இப்படிப்பட்ட வழிகளை விட்டு எம்பெருமானாரை நோக்கி இந்தப் பிரார்த்தனை செய்திருப்பது எதனாலென்று விமர்சிக்க வேண்டியது ஆவச்யகமன்றோ? புதிதாக நாம் என்ன விமர்சிக்கப் போகிறோம்? அக்காலத்தில் ஆழ்வாரருளிச் செயல்களெல்லாம் எம்பெருமானாரிட்ட வழக்காயிருந்தன வென்பது நிஸ்ஸந்தேஹமாக அறியக்கிடக்கின்றது. வெகு ச்ரமப்பட்டு அதிகரித்துப் பலகால் உருச்சொல்லித் தரிக்கவேண்டிய இந்த மஹத்தான ப்ரஹ்மவித்யையை ஸ்வாமி யெம்பெருமானாரொருவரே * **கலியுங்கெடுங்கண்டு கொண்மி**னென்று ஆசாஸித்த ஆழ்வாருடைய பரமக்ருபையினாலும், * **ஆமுதல்வனிவ னெ**ன்று அநுக்ரஹித்த ஆளவந்தாருடைய அற்புதமான அநுக்ரஹாதிசயத்தினாலும் அநாயாஸமாக க்ரஹித்து ஓரிடத்திலும் ஒரு விதமான ஸந்தேஹமும் விஸ்மரணமுமின்றிக்கே தரித்தருளியிருந்தாரென்பது ஸுஸ்பஷ்டமாகின்றது. இல்லையேல் இந்தத் தனியன்கள் இவ்வண்ணமாக அவதரித்திருக்க அவகாசமில்லையன்றோ.

அன்றியும், *வாய்ந்த பெருங்கீர்த்தி* என்கிற தனியனுக்கு அடுத்ததான "வான் திகழுஞ் சோலை" என்று தொடங்குந் தனியனில் "தமிழ்மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமாநுசன்" என்று சொல்லப் பட்டிருக்கின்றது. திருவாய்மொழியைப் பெற்ற தாயார் நம்மாழ்வாரென்றும், வளர்த்த தாயார் எம்பெருமானாரென்றும் அக்காலத்திலிருந்த ஆப்ததமர்களான ஆசிரியர்கள் அருளிச் செய்தார்களென்றால் திவ்யப் பிரபந்தங்களிலே எம்பெருமானார் எவ்வளவு ஈடுபாடு கொண்டவராக இருக்கவேண்டும்! திவ்யப்ரபந்தங்களைக் கற்க ருசியில்லாமலிருந்தவர்களை வலிய அழைத்துக் கற்க நியமித்தருளினர். வியாக்கியானங்கள் அவதரிக்க நியமனம் தந்தருளினர். ஆங்காங்கு அருமை பெருமை வாய்ந்த நிர்வாஹங்களை வெளியிட்டருளினர். திவ்யதேசங்களில் அருளிச்செயல் பிரசாரங்களை ப்ரபலப்படுத்தியருளினர். இவ்வண்ணமாகச் செய்தருளின செயல்களைக்கொண்டே "மொய்ம்பால் வளர்த்த விதத்தாய் இராமாநுசன்" என்று பணித்தார்கள். அக்காலத்தில் எம்பெருமானார் அவ்வளவு ச்ரத்தை கொண்டருளியிராவிடில் திவ்யப்ரபந்தங்கள் ஸ்ரீமந்நாத முனிகளின் காலத்திற்கு முன்னேயிருந்த விதமாகவே லோபமடைந்திருக்கும். அப்படியாகாத படிக்கு ஸ்வாமி யெம்பெருமானார் செய்தருளின சேமக்காப்பு வாசாமகோசரம். "ஸர்வதேசதசாகாலேஷு....ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்....திகந்தவ்யாபிநீ பூயாத் ஸாஹிலோகஹிதைஷிணீ" என்கிறச்லோகத்தை நாடு நகரமெங்கும் திவ்யப்ரபந்த ஸேவா காலங்களிலேயே அநுஸந்தித்து வருவதனால் அந்த ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞையானது திவ்யப் பிரபந்த விஷயமேயல்லது வேறு விஷயமன்று என்பது நன்கு உணரலாகிறது.

# திருவேங்கடமுடையானனுபவம்.

நிகழும் புரட்டாசி மாதத்தில் திருவேங்கடமுடையான் மஹோத்ஸவம் மிகச்சிறப்பாக நடைபெற்றது. அதனை ஸேவிக்கப் பெற்றவர்களும் பெறுதவர்களும் ஒருவாறு குணநுபவம் செய்து இன்புற வேண்டியதற்காக இந்த வியாஸ மளிக்கிறோம். சூடிக்கொடுத்த சுடர்க் கொடி தன்னுடையதிருமொழியிலே [—நாச்சியார் திருமொழியிலே] * **விண்ணீல மேலாப்பு** * என்கிற எட்டாவது பதிகத்தினல் திருவேங்கடமுடையான் பக்கலில் தனக்குள்ள காதலின் மிகுதியை மேகவிடுதூதான பாசுரங்களினல் வெகு அற்புதமாகத் தெரிவித்தாள். அப்பதிகத் தைப்பற்றியே இங்கு நம்முடைய அநுபவம் வெளியிடப்படுகின்றது.

இதற்குக் கீழ் *கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ ?* என்னும் பதிகத்தில், எம் பெருமானுடைய திருப்பவளத்தை ஸதா அநுபவிக்கிற பாஞ்சஜந்யாழ்வானேடு உசாவிப் போது போக்கினள். இராமபிரானிடமிருந்து தூதுவந்த குரங்கைநோக்கிப் பிராட்டி " **கதமூரு க்தம் பாஹூ ?**" (பெருமாளுடைய திருத்துடைகள் எப்படி இருக்கின்றன ? அவருடைய திருத் தோள்கள் எப்படி யிருக்கின்றன ?) என்று கேட்க, அவ்வனுமான் ஏதோ பதில் சொல்லி அவளைத் தேற்றினன். பாஞ்சஜந்யாழ்வான் உண்மையில் பரமசேதநனயிருந்தும் அவதார காலங்களிலே அசேதனனக இருக்கையாலே ஒரு மறுமாற்றஞ் சொல்லி ஆண்டாளைத் தேற்ற மாட்டாதானயினன். ஆகவே அவனேடு ஸம்பாஷித்துப் போதைப் போக்கலா மென்கிற மனோரதமும் பழுதுபட்டது. * **போதயந்த : பரஸ்பரம்** * என்று கீதையில் சொன்னபடிக்கு அவகாசமில்லை யாயிற்று. வருத்தமோ அதிகரித்தது. பிரிந்தார் இரங்குங்காலமான மாரிகால மும் அணுகிற்று. மேகங்களானவை மின்னி முழங்கிக் கொண்டுவந்து தோன்றின. பண்டு எம்பெருமான் கலந்து பிரிந்து போம்போது மீண்டுவருங்காலத்தைப்பற்றி ப்ரஸ்தாவிக்குங்கால் கார்காலத்தில் தவருதுவருவேனென்று கூறிப்போனது நினைவுக்குவந்தது. கார்முகில்வண்ண னை அவனும் அந்த மேகங்களோடு கூடவே வந்திருக்கக்கூடுமென்று நினைத்தாள். மேகங் களே ! திருவேங்கடமுடையானும் வந்தானேவென்று கேட்டாள். அவை மறுமாற்றமுஞ் சொல்லவில்லை, அவ்வெம்பெருமானும் புலப்படவில்லை. ஆகவே, மேகங்களை நோக்கி நீங்கள் என் தசையை அங்குச்சென்று திருவேங்கடமுடையானுக்கு அறிவிக்கவேணுமென்று இரக் கிருள். அதைத் தெரிவிப்பது இப்பதிகம்.

மஹா விவேகமுடையவளான ஆண்டாள் அறிவு நடையாடாத மேகத்தை நோக்கி வார்த் தைசொல்லுகிருளென்பது பொருந்தாதே. பரமபக்தர்களான மஹாசார்யர்களையே மேகமாக மறைத்துச் சொல்லுகிருளென்று ஸ்வாபதேசார்த்தங் காணவேணும். மேகத்திற்கும் மஹான் களுக்குமுள்ள ஒற்றுமையைச் சிலவகைகளாலே நிரூபிப்போமிங்கு.

1\. மேகமானது க்ஷாரமான ஸமுத்ரஜலத்தையுமுட்கொண்டு மதுர ஜலமாகப் பெய் வதுபோல, ஆசிரியர்கள் துரவகாஹங்களான வேதார்த்தங்களையும் பரம போக்கியமாக்கி ஸர் வோபஜீவ்யமாக வர்ஷிப்பர்கள்.

2\. மேகமானது * உயிரளிப்பான் மாகங்களெல்லாந்திரிந்து நன்னீர்கள் சுமந்து * என்ற திருவிருத்தப் பாசுரப்படியே பெய்யவேண்டுமிடமெங்கும் திரிந்து பெய்வதுபோல, ஆசிரியர்களும் *எண்டிசையும் பேர்த்தகரநான்குடையான் பேரோதி—தீர்த்தகரராமின் திரிந்து*

என்ற பூதத்தாழ்வார் பாசுரப்படியே க்ஷேத்ரதீர்த்த யாத்திரை யென்னும் வியாஜத்தாலே ஆங்காங்கு ஸஞ்சரித்து அர்த்தவிசேஷங்களைப் பொழிந்து மகிழ்விப்பர்கள்.

3. மேகமானது பள்ளமான இடங்களையும் வ்ருஷ்டியினால் நிரப்புவதுபோல, ஞானிகளும் ஸதுபதேச வ்ருஷ்டிகளினாலே நீசர்களையும் ஜ்ஞான பரிபூர்ணர்களாக்குவர்கள்.

4. மேகமானது ஸர்வதாவர்ஷியாமல் சில காலவிசேஷங்களில் வர்ஷிப்பதுபோல, குரவர்களும் ஸமய விசேஷங்களிலேயே ஸதுபதேச நிஷ்டர்களாகின்றனர்.

5. ப்ராப்தகாலங்களில் மேகம் பெய்யாவிடில் உலகில் பலவகைப்பீடைகள் தோன்றும்; இதுபோல ஸமயங்களில் ஸதாசார்ய ஸதுபதேசங்கள் இல்லையாயின் தேஹாத்மப்ரமம், ஸ்வஸ்வாதந்த்ர்யப்ரமம், அந்யசேஷத்வ ப்ரமம், ஸ்வரக்ஷணே ஸ்வான்வய யோக்யதாப்ரமம், ஆபாஸ பந்துக்களிடத்தில் பந்துத்வப்ரமம், விஷயப்ராவண்யம் ஆக இப்படிப்பட்ட பீடைகள் தோன்றும். இப்பீடைகள் தொலைவதற்காக அர்த்தங்களைப் பொழிவர் ஆசிரியர்கள்.

6. மேகம் எவ்வளவு பெய்தாலும் ஒருநாளும் த்ருப்தியடைவதுமில்லை. கைம்மாறு கருதுவதுமில்லை; அதுபோலவே ஆசிரியர்கள் எவ்வளவு உபதேசங்கள் செய்தருளினாலும் த்ருப்தியடையாமலும் ப்ரதியுபகாரம் கணிசியாதே அநந்யப்ரயோஜனர்களாயும் மேன்மேலும் உபதேசிக்கவே ஸமயம் எதிர்பார்த்திருப்பர்கள்.

7. மேகம் சில ஸமயங்களில் சிலசில நீர்த்துளிகளைப் பெய்து ஓய்ந்து போம்; சில ஸமயங்களில் போதும்போது மென்னும்படி மஹாவ்ருஷ்டியைப் பெய்து வியக்கப் பண்ணும். இப்படியே ஆரியர்களும் சிலபோது மந்த்ரோபதேசமென்று காதோடே சில அக்ஷரங்களை யுபதேசித்து நிற்பர்கள்; சிலபோது ச்ருதி ஸ்ம்ருதீதிஹாஸ புராண உபயவேதாந்த ரஹஸ்ய ஸாரார்த்த அம்ருதங்களை அநவதிகமாக வர்ஷித்து இது என்ன மஹா வ்ருஷ்டி யென்று ச்ரோத்தாக்களை விஸ்மயபரவசராக்குவர்கள்.

8. மேகம் சில விடங்களிற் பெய்யும் நீரானது காய்ந்த இரும்பிலே கொட்டின நீர் போல அஸத்கல்பமாகிறது; சில விடங்களிற் பெய்யும் நீரானது [சுக்திகளிலே] முத்தாகுகின்றது; அப்படியே ஆசிரியர்கள் சிலரிடத்தில் வர்ஷிக்கும் அர்த்தங்கள் அவர்களின் அநவதானத்தாலும் விஸ்மரணத்தாலும் அஸத்கல்பமாகிறது; சில மேதாவிகளிடத்தில் அநவதிகமான புஷ்டியையடைகின்றது, முத்துமாலைபோல் ஸ்ரீவசநபூஷணாதி நாமங்களினால் பூஷணத்வத்தையுமடைகின்றது.

9. மேகம் பெய்த நீர் ஆறு ஏரி குளம் முதலானவற்றில் தங்கி ஸர்வோபஜீவ்யமாகிறது; வேறிடங்களில் தங்கினால் அது கிரஹிக்கவும் அயோக்யமாகிறது. அப்படியே அதிகாரிகளான ஸத்பாத்ரங்களில் ஆசிரியர்கள் தேக்கும் அர்த்த விசேஷங்களானவை * பூர்வே பூர்வேப்யோ வச ஏததூசு: * என்று வேத மோதினபடியே ஸதுபதேசபரம்பரையில் உபஜீவிக்கவுரியவையாகின்றன; அவையே அநதிகாரிகளிடம் தங்கி நிஷ்ப்பலமாகின்றன.

10. மேகமானது * எத்தனையும் வான்மறந்த காலத்தும் பைங்கூழ்கள் மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும் * என்கிற குலசேகராழ்வார் பாசுரத்தின்படியே அநந்யகதிகளான பயிர்களினால் ப்ரதீக்ஷிக்கப்பட்டிருந்து, அதுவே எருக்கஞ்செடி முதலானவற்றிலே வர்ஷிக்குமளவில் * நீர்காலத் தெருக்கி லம்பழவிலைபோல் வீழ்வேனை * என்று இந்தப்பதிகத்திலாண்டாளருளிச் செய்கிறபடியே அவற்றுக்கு அபாயகரமாய் முடிகின்றது. இப்படியே ஸதாசார்யர்கள் அருளிச்செய்யும் அர்த்த விசேஷங்கள் ஸ்ரீ மதுரகவி ஸ்ரீமந்நாதமுனிகள் போல்வாரால் ஆவலோடு எதிர்பார்க்கப்பட்டிருக்கும்; மற்றையோரிடத்தில் * சாறுவாகமத

நீறு செய்து சமணச் செடிக்கனல் கொளுத்தியே * என்பது முதலான பாசுரங்களிற்படியே தொலைப்பனவாகும். இங்ஙனே மற்றும் பல வகையான ஒற்றுமைநயங்கள் உய்த்துணரத் தக்கன. ஆகவே இப்பதிகத்தில் மேகமாக விவக்ஷிதர்கள் ஸதாசார்யர்களே யாவர்கள். ஒவ்வொரு பாட்டிலுமுள்ள மேகவிசேஷணங்களை உற்றுநோக்குமிடத்து ஆசார்ய சிகாமணியான எம்பெருமானாரே தூதுவிடப்படுகிறாரென்று அறிய வெளிதாம்.

**அதைப்பற்றினவிவரணம் அடுத்த இதழில் வெளிவரும்.**

இப்பதிகத்தில் ஏழாம்பாட்டில் * கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்தொருநாள் தங்குமேல் என்னுவிதங்கும் * என்றுள்ளது ; கீழே * கேசவநம்பியைக் கால் பிடிப்பாளென்னுமிப்பேறு எனக்கருள் கண்டாய் * என்றும் * பள்ளி கொள்ளுமிடத்து அடி கோட்டிடக் கொள்ளுமாகில் நீ கூடிடு கூடலே * என்றும் கூறித் திருவடி ஸேவைக்கு மேற்பட்ட புருஷார்த்தத்தில் ருசியில்லாமையை வெளியிட்டிருக்கின்ற ஆண்டாள் இங்கு மூலைத்தடங்களோடணைக்கையாகிற ப்ராக்ருத போகத்தில் நசையைக் காட்டினது பொருந்துமோ வென்று சங்கிப்பர் சிலர் ; நன்கு பொருந்தும் ; கேண்மின் ; இப்பதிகம் அந்யாபதேச மர்யாதையில் அமைந்ததாதலால் கொங்கைமே லென்கிற விதுவும் அந்யாபதேசமேயாகும். கொங்கை யென்பது போகத்திற்கு உபகரணமாதலால் பகவதநுபவத்திற்கு உபகரணமான பக்திச் செல்வத்தைத் தெரிவிப்பதாகும். ஞானபக்திகளையே இரண்டு கொங்கைகளாகச் சொல்லுகிறது. ஞானபக்தியையுடையவர்களுக்கே பரிபூர்ண பகவதநுபவயோக்யதை யிருப்பதால். இனி, கொங்கைமேல்குங்குமத்தின்குழம்பு அழியவேணுமென்று விரும்பியதின் கருத்தாவது, ஞானபக்திகளுக்கு இயற்கையான வடிவென்றும் செயற்கையான வடிவென்றும் இரண்டுண்டு ; பகவதநுபவத்திலேயே ஊற்றமுற்றிருக்கை இயற்கை வடிவு ; விஷயாந்தரங்களிலூன்றியிருக்கை செயற்கை வடிவு. கொங்கைகளின் மேல் குங்குமக்குழம்பு பூசுவதென்பது செயற்கைவடிவமேயன்றி இயற்கை வடிவமன்றாதலால் ஞான பக்திகளின் செயற்கைவடிவம் அழியவேணுமென்றதாயிற்று. செந்நிறமான குங்குமக்குழம்பு அழியவேணுமென்றபோதே செந்நிறமான ரஜோகுணம் தொலையவேணுமென்று கோருவதாகக் கொள்ளவேணும். ரஜோகுணமேயில்லாத போது தமோகுண மிருக்க ப்ரஸக்தியே யில்லை. ஆகவே சுத்த ஸாத்விகஜ்ஞான பக்திகளின் முதிர்ச்சி வேண்டப்பட்டதாயிற்று. ஆண்டாள் எம்பெருமானார் போன்ற மஹாசார்யர்களை முன்னிட்டுக் கொண்டு திருவேங்கடமுடையானைப் பரிபூர்ணாநுபவஞ் செய்யக் காதலித்தபடியை இப்பதிகத்தினால் வெகு ரமணீயமாகக் கூறினளாயிற்று.

---

# எம்முடைய அபிலாஷையொன்று.

நம்முடைய பூர்வாசார்யர்களைப்பற்றி அடியேன் நினைக்கும்போதெல்லாம் அபரிஹார்யமான துக்கமொன்று படுவதுண்டு ; அவர்களின் திவ்யமங்கள விக்ரஹங்களை நாம் நேராக ஸேவிக்க பாக்கியம் செய்திலோமானாலும் அவர்களுடைய திருவுருவப் படமாவது கிடைக்க வழியிருந்தால் ஒருவாறு அதை ஸேவித்தாவது மனச்சாந்தியடையலாமே ; அதற்கும் வழியில்லாமலிருக்கிறதே ! யென்று துக்கிப்பதுண்டு. மணவாளமாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்திகளை ஸேவிக்கும்போதெல்லாம் " இப்படி பரமபவித்திரமாய் பரமபோக்யமான ஸ்ரீஸூக்திகளையருளிச்செய்தவருடைய அந்த பரமஸத்வ ஸமாச்ரய திவ்யமூர்த்தி எப்படித்தானிருந்திருக்குமோ ! அந்தோ அத்திருவுருவத்தை ஸேவிக்கப்பெறாத பாவியாயொழிந்தோமே ! " என்று

நாடோறும் வருந்திக் கண்ணீர்விட் டழுவதுமுண்டடியேன். முற்காலத்தில் போட்டோ பிடிக்கும் கருவியும் ஆப்டோன் ப்ளாக்கெடுக்கும் ஸாதனமு மில்லாமையினுலேயே இப்படி நாம் வருந்தவேண்டியதாகிறது. இக்காலத்தில் அப்படிப்பட்ட ஸாதனங்களுக்குக் குறை யில்லாமையினுலே பின்புள்ளார் நம்மைப்போல வருந்தவேண்டாதபடி செய்துவைக்க வேணு மென்கிற ஆசை அடியேனுக்குப் பெரிதுமுண்டு. பலவிதத்திலும் பெருமைவாய்ந்த பெரியார் கள் இக்காலத்திலும் பலருளர். இவர்களைப் பிற்காலத்தவர்கள் ஸேவிக்கப் பெறவில்லை யென்கிற இழவு தோன்றுதபடி இவர்களுடைய திருவுருவப் படங்களையெல்லாம் சேகரித்து நமது பத்ரிகை மூலமாக வெளியிட்டுவைக்க மஹத்தான குதூஹலமுள்ளது. சில வருஷங் களுக்கு முன்பு முப்பது நாற்பது பெரியார்களின் திருவுருவப்படங்களை நமது அம்ருதலஹரீ பத்ரிகை மூலமாக வெளியிட்டிருந்தோம். பெரும்பாலும் வைகுண்டவாஸிகளான மஹான் களின் திருவுருவங்கள் அப்போது வெளியிடப்பட்டன. இப்போது பெரும்பாலும் ஜீவித்திருக் கின்ற மஹான்களின் திருவுருவப்படங்களை வெளியிட வேணுமென்று அபிலாஷை. திருநாட் டுக்குச்சென்றவர்களின் திருவுருவப்படங்களும் ஆவச்யகமானவை வெளியிடப்பெறும்.

இக்காலத்தில் ஆங்காங்கு மடாதிபதிகளாகவும் ஆசார்யபுருஷர்களாகவும் வித்வான் களாகவும் பண்டிதர்களாகவும் மற்றும் அதிகாரபதவிகளில் சிறந்தவர்களாகவும் விளங்குகின்ற மஹான்களின் படங்களை இப்பத்திரிகையில் வரிசையாக வெளியிட்டுவர ஆவல்கொண்டிருக்கி ரோம். நம்முடைய சக்திக்குத் தகுந்தவளவு இதற்கு முயற்சி செய்வோம். ஆங்காங்குள்ள பெரியார்கள் தங்கள் தங்களுடைய படங்களையும் தாமறிந்த மஹான்களுடைய படங்களை யும் அவச்யம் சேகரித்து அனுப்பவேணுமென்று ஸவிநயம் ப்ரார்த்திக்கிரோம். ஆனால் மஹான் கள் தங்கள் படத்தைத் தாங்களேயனுப்ப ஸங்கோசப்படுவர்கள். நம்முடைய கோரிக்கையை நிறைவேற்ற வேண்டியும் உலகமுய்யவேண்டியும் அவரவர்கள் பரமகிருபையோடு அனுப் பவேவேண்டும். ப்ரத்யேகமாகவும் விஜ்ஞாபனஞ் செய்து கொள்வோம். நைச்யம் பாவித்து நம்முடைய பிரார்த்தனையைப் பழுதாக்கிவிட வேண்டாமென்று விசேஷித்து வேண்டிக் கொள் ளுகிரோம். சில பெரியார்களிடத்தில் ப்ளாக்கே ஸித்தமாக இருக்கவுங்கூடும். அதை யுபகரிப்பதும் நன்று.

சில பெரியோர்கள் வைதிகர்களாக வல்லாமல் லௌகிகர்களாக இருந்தாலும் [அதா வது, வக்கீல் முதலான பதவிகளி லிருந்தாலும்] ஸம்ப்ரதாயத்தி லீடுபாடுள்ளர். அப்படிப்பட்ட பெரியார்களின் படங்களையும் இதில் சேர்க்க விருப்பமுண்டு.

இப்படிப்பட்ட விருந்து ஸஞ்சிகைதோறும் நேரவேணு மென்பது எமது விருப்பம். ஒரு ஸஞ்சிகையிலேயே பல பெரியார்களின் திருவுருவப்படங்களை வெளியிட நேர்ந்தால் அது விசேஷித்ததொரு பாக்கியமேயாகும்.

இடையிடையே திவ்யதேசத் தெம்பெருமான்களுடையவும், அவதாரஸ்தலங்களிலுள்ள ஆழ்வாராசாரியர்களுடையவும் திருவுருவப் படங்களும் வெளியிடப்பட்டுவரும். அவற்றையும் ஆங்காங்குள்ள பெரியார்கள் சேகரித்து உதவியருளவேணும்.

---

## விளம்பரம்—திவ்யப்ரபந்த ஸாராம்ருதம்.

ஸ்ரீ காஞ்சீ அண்ணங்கராசாரியர் ஸ்வாமியால் இன்சுவைமிக்கதாக எழுதப்பட்ட மேற்கண்ட பெயர் பூண்டநூல் மிகவும் பெரிதானது. அதில் முதற்பாகம் இப்போது வெளிவந்துள்ளது. திருப் பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி, திருப்பாவை, நாச்சியார் திருமொழி ஆகிய நான்கு திவ்யப் பிரபந்தங்களின் ஸாரம் இப்பகுதியில் அடங்கியுள்ளது. விலை 0—12—0 கிடைக்குமிடம், க்ரந்த மாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

—மானேஜர்.



ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி.
திருமலை திருப்பதி சின்ன ஜீயர்ஸ்வாமி.
பூர்வாச்ரமத்தில், ஸ்ரீவில்லிபுத்தூர்
ஸாது ராமாநுஜாசார்யர் ஸ்வாமி
யென்று வழங்கப்பட்ட மஹாவித்வான்.

(வடநாட்டுத்திருப்பதி யாத்திரை முன்தொடர்ச்சி)

## ஸ்ரீபதரிகாச்ரமயாத்திரை.

பதரிகாச்ரமத்திற்கு மூலஸ்தானமாகிய ஹரித்வாரத்தில் நின்று 183-வது மைலில் உள்ளது ஸ்ரீபதரிகாச்ரமம். இடையில் பதினைன்காவது மைலிலுள்ளது ஹ்ருஷீகேச க்ஷேத்ரம். காலால் நடந்தே வதரிவணங்கச் செல்பவர்கள் இங்கிருந்தே நடந்துசெல்ல ஆரம்பிக்கின்றார்கள். ஆனால் இங்கிருந்து இன்னமும் வெகுதூரமளவும் மோடார்பஸ் போக்குவரத்து ஏற்பட்டுப் பல வருஷங்களாயின. அதாவது, ஹ்ருஷீகேசத்திலிருந்து சமோலி என்கிற ஊர்வரையில் இரண்டுநாளில் மோடார் பஸ்ஸில் ஏறிச்செல்லலாம். அதற்காகச் செலவு 15 ரூ. அங்கிருந்து நடந்து செல்வதில் அதிகமான சிரமம் ஒன்று மில்லை. நாலைந்து நாளில் எளிதாகச் சென்று சேரலாம். அங்கிருந்து வதரி 48 மைல்.

நடக்கமுடியாதவர்களுக்கு மூன்று வகையான ஸாதனங்களுள்ளன. (1) டண்டி. (2) கண்டி. (3) குதிரை. நான்குபேர்களால் சுமக்கப்படுகிற வாஹனம் டண்டி யென்பது. தண்டிகை யென்றபடி. ஒருவர் முதுகிலே கட்டிக்கொண்டு போகிற பிரப்பம் புட்டிக்கூடைக்கு கண்டி யென்று பெயர். இதில் உட்கார்ந்து செல்வாருமுளர். குதிரை சவாரி தெரிந்ததே. அதிகப்படியான ஸாமான்கள் இருந்தால் அவற்றைத்தனியே சுமந்து செல்லக் கூலி யாட்கள் கிடைப்பதுண்டு.

வழி முழுதும் அனேகமாய் கங்கையைக் கண்டு கொண்டே போவோமானாலும் அதன் தீர்த்தம் நமக்கு எளிதாகாது. சிலசில விடங்களில் மாத்திரம் கங்கையிலிறங்க வழி கிடைக்கும். மற்ற இடங்களிலெங்கும் மலையருவி நீர்ப்பெருக்கு வாய்த்திருக்குமழகு வாய்கொண்டு வருணிக்க முடியாதது. ஸ்நாந பாநாதிகளுக்கு முற்றிலும் இந்தத் தாரையே உபயோகமாகும். கண்ட காட்சியிலேயே ஸகல தாபங்களுமாறும்.

வழியில் எங்கு சிரமம் தோன்றினாலும் அங்குத் தங்கியிருக்க வசதிகளுண்டு. சில இடங்களில் இரண்டு மூன்று மைல் தூரத்திலும், சில இடங்களில் நாலைந்து மைல் தூரத்திலும் தங்குமிடங்கள் அழகாக ஏற்பட்டிருக்கின்றன. அவை சட்டிகளென வழங்கப்பெறும். பெரும்பாலும் மேல்மாடமுள்ள மாளிகைகளாகவே தென்படும். ஆங்காங்கு பசைரக்கு மளிகைகளுமுண்டு. தளிகைக்குப் பாத்திர வகைகளும் அன்புடனளிக்கின்றார்கள். சிலவிடங்களில் புளி தயிர் காய்கறி கிடைப்பதரிது.

இவ்வழியிலுள்ள ஊர்கள் தவிர, மலையின்மேல்பாகங்களிலும் சுற்றுப்பாகங்களிலும் இருக்கின்ற கிராமங்கள் ஏறக்குறைய 1500 என்று கணக்குத் தெரியவந்தது. தபால் ஸப் ஆபீஸ்கள் 16. ப்ராஞ்சு ஆபீஸ்கள் 70. இவற்றுக்கெல்லாம் தலைமையாபீஸ் உள்ளது பௌடி என்னுமூரில். இம்மலைப்பிராந்தம் முழுவதும் Garhwal-Pouri District எனப்படுகிறது. இரவு பகலாகக் குதிரைகளின்மேல் தபால்கள் சென்றுகொண்டேயிருக்கின்றன. தாமதமின்றித் தபால்கள் எங்குங் கிடைக்க ஒழுங்கான வழிகள் ஆச்சரியமாக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. தந்தி மார்க்கமும் மிக அற்புதமாகவுண்டு. தந்தி செல்லவில்லாத சில விடங்களில் டெலிபோன் ஏற்படுத்தப்பட்டுளது.

ஹ்ருஷீகேசத்திலிருந்து நாற்பத்தைந்தாவது மைலில் தேவப்ரயாகமென்றுள்ளது. இது பாகீரதிக்கும் அலகநந்தாவுக்கும் ஸங்கமமாகுமிடம். பெரியாழ்வார் திருமொழியில் (4-7) * தங்கையை மூக்கும் தமையனைத் தலையும் * என்கிற திருமொழியில் மங்களாசாஸனம் செய்துள்ள கண்டமென்னுங் கடிநகர் இத்தலமே யென்கிறார்கள்.

இவ்விடத்தில் நரஹரிசாஸ்த்ரி, முரளீதர சாஸ்த்ரி என்னும் தீர்த்த புரோஹிதர்கள் [ஸ்ரீவைஷ்ணவப் பண்டாக்கள்] நம்மவர்களுக்குத் தங்குமிடம் முதலியன கொடுத்து வெகு ஸௌகரியங்கள் செய்கிறார்கள்.

இங்கிருந்து பதினெட்டாவது மைலிலுள்ளது கீர்த்திநகர். அங்கிருந்து மூன்று மைல் தூரத்திலுள்ளது ஸ்ரீநகர். அன்று மாலையே இவ்விடம் வந்து சேர இயலும். இங்கிருந்து 105 மைலிலுள்ளது ஸ்ரீபதரிகாச்ரமம்,

யாத்திரை செய்ய நினைப்பவர்களுக்கு ஸௌகர்யார்த்தமாகவே அடியேன் இச்சிறு நூல் எழுதி வெளியிடுவதால் இங்கிருந்து பதரிகாச்ரமம் வரையில் இடையில் அடியேன் தங்கின இடங்களை வரிசையாகக் குறிப்பிடுகிறேன். இந்த இடங்கள் மிகவும் ஸௌகரிய மாக இருந்தன. இந்த இடங்களிலேயே தங்கவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை. நித்தியம் காலை வேளைகளில் 10, 12 மைல் தூரமும் மாலை வேளைகளில் 7, 8 மைல் தூரமும் செல்ல வல்லவர்களுக்கு இந்த இடங்களில் தங்க வாய்க்கும். சக்திக்கிணங்க 4, 5 மைல் அல்லது 7, 8 மைல் வழியளவே செல்லவல்லவர்களுக்கு வேறு வேறு இடங்களிலும் தங்க நேரும். ஸ்ரீநகர் என்கிற விடத்திலிருந்து சமோலீ என்கிறவிடம் வரையில் சிலவருஷங்களாக மோடார்பஸ் போக்குவரத்து ஏற்பட்டிருந்தாலும் இந்த வழியில் பஸ்ஸில் இடம் கிடைப்பது மிகவும் கஷ்டம். மூன்றிடங்களில் பஸ் மாறவேண்டியிருக்கிறது. ஒவ்வோரிடத்திலும் பலநாள் காத்திருந்தாலொழிய பஸ் கிடைப்பதில்லை. ஆகவே ஹ்ருஷீகேசத்திலிருந்து கீர்த்திநகர் வரையிலுமே பஸ்ஸில் வருவது உசிதம். கீர்த்திநகரிலிருந்து மூன்று மைல் தூரத்திலுள்ள ஸ்ரீநகருக்கு எப்படியும் நடந்தேவந்து சேரவேண்டும். பிறகு ஸ்ரீநகரிலிருந்தும் பதரிகாச்ரமம்வரையில் மோடார்பஸ்ஸை எதிர்பாராமல் செல்வதே உத்தமம்.

ஸ்ரீநகர், பட்டேஸர், ருத்ரப்ரயாகை, சிவாநந்தீ, பிப்பலசட்டியென்கிற சடவாபீபல், கர்ணப்ரயாகை, நந்தப்ரயாகை, சமோலி, மடசட்டி, கருடகங்கா, பாதாளகங்கா, ஜோஷீமட், பாண்டுகேச்வர், ஹநுமான்சட்டி பதரிநாத்—இவ்விதமாகத் தங்குமிடங்கள் கண்டுகொள்வது. நந்தப்ரயாகைக்குப் பிறகு சமோலி யென்கிற (7-வது மைலிலுள்ள) இடத்தில் தங்காமல் 9-வது மைலிலுள்ள மடசட்டியில் தங்கிப்போவதே உத்தமம். வேறு சில சட்டிகளின் பெயர்களையும் குறிப்பிடுகிறேன். அவ்விடங்களும் தங்குவதற்குத் தகுதியானவை. (ஸ்ரீநகர்க்குப்பிறகு) ஸ்ரீகோட், ஸூக்ருதீ சட்டீ, காங்கரா சட்டீ, நரகோட், குலாபராய், சமோலீ, ஹாட்சட்டீ (அல்லது) நாராயண சட்டீ, குலாபகட் சட்டீ, குமார சட்டீ, பைநீ சட்டீ, விஷ்ணு ப்ரயாகம், சேஷதாரா, லாம்பகட் சட்டீ, என்பவை.

ஜோஷீமட் என்கிற விடம் திருமங்கையாழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற [பிரிதி] திவ்யதேசம் என்கிறார்கள். இங்கு இரண்டு கோவில்களுள.

ஜோஷிமட்டிலிருந்து 20 மைல் தூரத்திலுள்ளது ஸ்ரீபதரிகாச்ரமம்.

ஊருக்கு பத்ரிநாத் என்றுபெயர். இது மிகச் சிறியவூரே. கங்கையின் கரையிலேயே ஸ்ரீபதரீநாதனுடைய திவ்ய ஸந்நிதியுள்ளது. ஸந்நிதி மிகப்பெரிதுமன்று, மிகச் சிறிதுமன்று. * நரநாரணனாயுலகத்து அறநூல் சிங்காமை விரித்தவனெம்பெருமான் * என்று திருமங்கையாழ்வாரும், "தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று திருமந்த்ரத்தை வெளியிட்டருளினான்" என்று பிள்ளை லோகாசார்யரும், "திருமந்த்ரத்தை ஸ்ரீபதரிகாச்ரமத்திலே.........ப்ரகாசிப்பித்தான்" என்று மணவாள மாமுனிகளும் அருளிச் செய்தபடியே எம்பெருமான் நாராயண மூர்த்தியாய் விபவாவதாரஞ் செய்தருளின விடமென்கிற ஒப்புயர்வற்ற ஏற்றம் பெற்றது இந்த திவ்யதேசம். இப்பெருமை பற்றியே இத்தலம் உத்தேச்யம்.

ஸந்நிதியில் ஸ்ரீமந் நாராயணன் எழுந்தருளியிருக்கிறார். ஸாளக்ராம சிலாமயமாய் பத்மாஸந பந்த முள்ளதாய் யோக முத்திரையோடு கூடின இரண்டு திருக்கைகளை யுடையதான திருமூர்த்தி [ஸ்ரீமந் நாராயணன்] நடுவில் ஸேவைஸாதிப்பது. இடபுறத்தில் நரநாராயண சிலா மூர்த்திகள். வல புறத்தில் கருத்மான், குபேரன்.

மலை நாட்டு நம்பூரிகள் திருவாராதனம் ஸமர்ப்பிக்கிறார்கள். அர்ச்சகர்களை 'ராவல்' என்று இங்கு வழங்குவர். தினப்படியாய் காலையில் திருமஞ்சனம் வெகு விபவமாக நடைபெறுகின்றது. நூற்றொரு ரூபாய் கட்டணம் செலுத்துமவர்கள் திருமஞ்சனமுட்பட ஒருவேளை யுபயக்காரர்களாவர்கள். அவர்கள் அருகிலிருந்து திருமேனியைப் பரிபூர்த்தியாக ஸேவித்து மற்றெல்லாமும் ஸேவித்து மகிழ ப்ராப்தமாகிறது. செவிக்கினிய வேத கோஷத்துடனும் ஸதோத்ரரத்னம் முதலிய பல ஸ்தோத்ரங்களின் பாராயணங்களுடனும் ஸகலோபசார ஸமேதமாக நடைபெறுகின்ற திருமஞ்சனம் அலங்காரவகை திருவாராதனம் முதலியவை மநோஹரங்களாயிருக்கின்றன. 22 ரூபாய் செலுத்தினால் ஸஹஸ்ரநாமார்ச்சனை. ஐந்து ரூபாய்க்கு அஷ்டோத்தர சதநாமார்ச்சனை. ஒரு ரூபாய்க்கு ஹார்த்தி. என்றிப்படி நிபந்தனைகள் ஏற்பட்டிருக்கின்றன. பனியின் பாதை இங்கு அதிகமேயாதலால் உடலுக்குப் போதுமான கவசங்கள் இருக்க வேண்டும். அர்ச்சகர் முதலான ஸன்னிதி கைங்கர்ய பரர்களுங்கூட நாலைந்து சொக்காய்களணிந்தே கைங்கரியங்கள் நடத்தி வருகிறார்கள். உத்தரீயமும் போர்த்துக்கொள்ளாமல் உலாவுகின்ற ஸாது மஹாத்மாக்களும் சிலருளர்.

இங்குத் தீர்த்தமாடுவதற்கு எம்பெருமான் தானே பரமக்ருபையுடன் பண்ணிவைத்திருக்கின்றஸௌகரியம் அற்புதமானது. ஸந்நிதியெதிரில் தப்தகுண்டமென்று ஒரு சிறு குளமுள்ளது. அதில் இரவும் பகலு மோய்வின்றி உஷ்ணதீர்த்ததாரை அமோகமாகப் பெருகிக்கொண்டே யிராநின்றது. அதிலிருந்து வெளியிற் பெருகிச் செல்லுகின்றது. இந்த தீர்த்தம் பெருமாளுடைய திருவடிவாரத்தில் நின்றுமே பெருகுவதாகத் தோன்றுகிறது. அடியார்களின் பாங்குக்காக அக்நிபகவானுக்கு ஸ்ரீமந்நாராயணன் தானே கட்டளையிட்டு இங்ஙனே நடத்தி வருகிறபடி. கெந்தகத் தீர்த்தமிது.

இந்த தப்தகுண்டத்தில் அமிழ்ந்தே அனைவரும் நீராடுகிறார்கள். பின் மாலை நான்கு மணி முதலாகவே நீராடுவதும் பெருமாளை ஸேவிப்பதுமான காட்சி பரம புனிதம். இந்த தப்தகுண்டம் அங்கு இல்லையென்றால் ஒருவரும் ஒரு நிமிஷமும் அங்கு வாஸம் செய்ய இயலாது. தேஹம் பொறுக்குமளவான சூடு பொருந்திய இந்த தீர்த்தத்தின் பக்கத்திலேயே தேஹம் பொறுக்கமுடியாத குளிர்ச்சி வாய்ந்த கங்கையும் ஆச்சரியமாகப் பெருகுகின்றது. அதில் குடைந்தாடுவார் மிகச் சிலரே.

ஸந்நிதியின் ஸமீபத்திலேயே ப்ரஹ்மகபாலமுள்ளது. அதில் பிண்டப்ரதான முறைகளும் நடைபெற்று வருகின்றன. மலையின் ஒரு சிறுபாறையே கபாலத்தின் ஆக்ருதியாகக் காண்கிறது. ஏழெட்டு ரூபாய் செலவில் ப்ரஹ்மகபால ச்ராத்தம் செய்யலாம்.

இத்தலத்தில் முக்கியமான தீர்த்தங்கள் ஐந்து. தப்தகுண்டம், நாரதகுண்டம், கூர்ம தாரா, ப்ரஹ்லாத தாரா, ரிஷிகங்கா என்பவை. கூர்மதாரையின் தீர்த்தமே பெரும்பாலும் இவ்விடத்தில் அன்னபானங்களுக்குக் கொள்ளப்படுகிறது. தப்தகுண்ட தீர்த்தம் வாயினுட்செல்லாது. நியதமாக வதரியில் வாழ்பவர்கள் ப்ரஹ்லாததாரையில் நீராடுகிறார்கள். இது ஆரோக்யமளிப்பதாம். இந்த தீர்த்தம் அநுஷ்ணசீதம்.

தேவப்ரயாகையிலுள்ள நரஹரி சாஸ்த்ரிகளே இங்கும் தீர்த்த புரோஹிதராய் ஸ்ரீவைஷ்ணவ அப்யாகதர்களுக்கு இடமளித்து ஸௌகரியங்கள் செய்து கொடுக்கிறார், ராமாநுஜகூடங்களுமுண்டு. தருமசாலைகளுமிருக்கின்றன.

இங்கிருந்து திரும்புகையில் சிலர் ஹரித்வாரம் வாரமலே கர்ணப்ரயாகையிலிருந்தே வேறுவழியாகச் செல்வதுமுண்டு. ஹரித்வாரமே வந்து சேர்வது நன்று. போகும்போது கங்கோத்தரீ, கேதாரநாத் (சைவ க்ஷேத்திரம்) என்னுமிடங்களுக்கும் சென்று திரும்பி வதரி வந்து சேர்வாருமுளர். வதரியிலிருந்து இன்னமும் வடக்கே வஸுதாரா ஸத்யபதம் முதலிய இடங்களுக்குச் செல்வாருமுளர்.

## நைமிசாரணியம்.

ஹரித்வாரத்தில் ரயில் ஏறி பிறகு அயோத்யை வரும் வழியில் 'பரேலி' என்கிற மகாநகரத்தில் இறங்கலாம். அங்கே ஆசார்யபீடாதிபதி ஸ்ரீராகவாசார்யஸ்வாமிகளின் ஸ்தானம் சௌகரியமளிக்கும். பாலாமு என்கிற ஜங்ஷனில் பிரிந்துசென்று நிம்ஸார் என்கிற ஸ்டேஷனில் இறங்கவேண்டும், நைமிசாரணியமென்பதே 'நிம்ஸார்' என்று திரிந்திருக்கின்றது. சில வருஷங்களாக நைமிசாரண்யமென்றே ஸ்டேஷன் பெயர் மாற்றப்பட்டிருக்கிறது. எம்பெருமான் புஷ்கர க்ஷேத்ரத்தில் தீர்த்தரூபியாகவே அவதரித்தது போல இங்கே அரண்ய ரூபியாகவே அவதரித்ததாகப் புராண வரலாறு. இங்கு ஒரு ஸந்நிதி ஏற்பட்டு ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு வெகு ஸௌகரியமளிக்கின்றது. அதாவது, ஹரிப்ரபந்நாசாரியென்கிற உத்தராதி 15 வருஷங்களுக்குமுன் கட்டிவைத்த கோவில். தோதாத்ரிமட் என்றும் சொல்லுவதுண்டு. இங்கு ஸமீபத்தில் கோமதீநதி பெருகுகின்றது. இங்கிருந்து மறுபடியும் பாலாமு ஜங்ஷன் சேர்ந்து 6 மணிகாலத்தில் அயோத்யை அடைவது. இடையில் லக்னௌ, கான்பூர் காணலாம். கான்பூர் அவசியம் காணத்தக்கதே சுத்தகங்கை பெருகுவது இங்கே. ஹரித்வாரத்தில் மாலை 7 மணிக்குப் புறப்பட்டால் மறுநாள் உதயம் எட்டுமணிக்கு நைமிசாரணியம். இங்குச்செல்லாமல் நேரே அயோத்யை செல்லுவதானால் பகல் 12 மணிக்குள் அயோத்யை சென்று சேரலாம்.

## அயோத்யை.

பலர் அயோத்யை ஸ்டேஷனிருப்பது அறியாமல் 'பைஜாபாத்' என்கிற ஸ்டேஷனில் இறங்கி 5, 6 மைல் தூரம் வண்டி வழியாக வந்து அயோத்யை சேருகிறார்கள். அயோத்யை என்றே ஸ்டேஷனிருப்பதால் அதிலிறங்கிச் செல்லுவதே பாங்கு. இத்தலத்தில் ஸ்ரீ. உ. வே. யோகி பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமி நாற்பதைம்பது வருஷங்களுக்கு முன் சக்ரவர்த்தி திருமகன் ஸந்நிதி பிரதிஷ்டை செய்தருளியிருப்பதால் இந்த ஸந்நிதியே நம்போன்றவர்களுக்குச் சிறந்தபுகலிடம். இது ஸரயூநதிக்கு ஸமீபமாகவே யுள்ளது. "கோலாகாட் ஸ்ரீதர்ப்பசயன மந்திரம்" என்று இந்த ஸந்நிதியை வழங்குவர்கள். ஆனாலும் "அம்மாஜீ மந்திரம்" என்றே ஸர்வஜந ஸாதாரணமான வ்யவஹாரம். இவ்வூரில் காணவேண்டிய காட்சிகள் பல.

## (அலஹாபாத்) ப்ரயாகை.

அயோத்யையிலிருந்து நாலைந்துமணி காலத்தில் அலஹாபாத் சேருகிறது. ப்ரயாக க்ஷேத்ரத்திற்கு இதுவே பெரிய ஸ்டேஷன். (சின்ன லயனில் ப்ரயாக் என்கிற ஸ்டேஷனுமுள்ளது.)

'தாராகஞ்ஜ்' என்னுமிடத்தில் தங்கவேண்டும். அவ்விடத்திலேயே த்ரிவேணி ஸங்கம ஸ்நாந கெட்டம் அணித்தாகவுள்ளது. கங்கை, யமுனை, ஸரஸ்வதீ யென்கிற மூன்று புண்ணிய நதிகள் த்ரிவேணி என்னப்படுகின்றன. இங்கு கங்கையும் யமுனையும் ஸங்கமமாவதே கண்கூடாகத் தெரிகின்றது. ஸரஸ்வதி அந்தர்வாஹிநியாக வுள்ளது: ஸங்கமஸ்தானத்திற்குப் படகிற் சென்று நீராட வேண்டும். சிறிது தூரத்தில் பரத்வாஜ மஹர்ஷியின் ஆச்ரமமும் காட்டப்படுகிறது. தாராகஞ்ஜில் த்ரிதண்டி மடம் என்கிற இடம் நம்போன்றவர்களுக்கு ஸௌகரியமான புகலிடம். இதர மடங்களும் தருமசாலைகளும் உள்ளன. கீடகஞ்ஜில் வேணீமாதவமந்திரமும் நம்மவர்களுடையது.

## சித்ரகூடம்.

ப்ரயாகையிலிருந்து சித்ரகூடம் சென்று ஸேவித்து மீண்டும் ப்ரயாகைக்கே வந்து, மேலே காசி முதலான இடங்கள் செல்லவேண்டும். அலஹாபாத்திலிருந்து பம்பாய் போகும் வழியில் மாணிக்பூர் என்கிற ஸ்டேஷனில் வண்டி மாறி சித்ரகூடம் செல்ல

வேண்டும். சித்ரகூட் என்றே ஸ்டேஷனிருந்தாலும் அங்கே யிறங்குவதில் ஸௌகரியமில்லை; அதற்கு முன்னமே கர்வி என்கிற ஸ்டேஷனில் இறங்குவது நன்று. ஷெ ஸ்டேஷனுக் கருகில் விசாலமான தர்மசாலையுண்டு. அங்கிருந்து நாலைந்து மைல் தூரம் வண்டியில் சென்று சித்ரகூடம் சேருவது. இப்போது மோட்டார் பஸ் போக்குவரத்து ஏற்பட்டுள்ளது. மந்தாகினீ நதியும் சித்ரகூட மலைச்சாரலும் பரம ரமணீயமான இடங்கள். இங்கே பார்க்க வேண்டிய இடங்கள் பலவுள்ளன. சுகமாக வாஸஞ்செய்ய அழகிய தர்மசாலைகள் உள்ளன. கிரிப்ரதக்ஷிணம் செய்வது மிக அவசியமானது.

இவ்விடமிருந்து மறுபடியும் மாணிக்பூர் வழியாகவே ப்ரயாகை சேருவது.

## காசீ க்ஷேத்ரம்.

ப்ரயாகையிலிருந்து நாலைந்து மணி காலத்தில் காசி சேருகிறது. இங்கு தரும சாலைகள் மந்திரங்கள் பல பல இருந்தாலும் கங்கைக்கரையில் இடம்பார்த்து வஸிப்பதே விரும்பத்தக்கது. "நாக்பூர் போஸலாமந்திர்" என்கிற இடம் மிகவும் விசாலமாகவும் பரம ஸௌகரியமாகவுமுள்ளது. இதைக்காட்டிலும் ஸௌகரியமான இடம் வேறு இராதென்றும் சொல்லலாம். இதனுள்ளேயே கங்கையும் பெருகுகின்றது. இந்த மந்திரத்தில் வஸிக்க நபர் 1-க்கு நாள் 1-க்கு ஒரு அணு வாடகை செலுத்தவேண்டும். தேவேந்திரபவனமே இது.

## கயா க்ஷேத்ரம்.

காசியிலிருந்து ஐந்தாறு மணிகாலத்தில் இவ்விடம் சேருவது. இங்கு புரோகிதர்களின் ஆதரவு யாத்திரிகளுக்குப் பெரிதும் கிடைக்கும். ஆனாலும் சில வருஷகாலமாக இங்குப் பல்குநீநதிக் கரையில் ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் ஜகத்குரு ஸ்ரீமதநந்தாசார்ய ஸ்வாமி திருவருளால் அமைந்திருக்கின்ற ராமானுஜ கூடம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் பாங்கான புகலிடம். கயாச்ராத்தமென்பது இந்த க்ஷேத்திரத்திலேயே. நமது நாட்டுப் புரோஹிதர்கள் இங்குப் பலருளர்.

## கல்கத்தா நகரம்.

கயையிலிருந்து அடுத்தபடியாக ஸ்ரீஜகந்நாத க்ஷேத்ரம் செல்லவேண்டியதாகிறது. இடையில் இம்மஹா நகரமும் அனுபவிக்கத்தக்கது. இங்கும் ரயில் ஸ்டேஷன் வாசலில் கங்கை ஸததப்ரவாஹமாகப் பெருகுகின்றது. அதன் ஸமீபத்தில் தருமசாலைகளும் மந்திரங்களும் வஸதிக்கு ஸௌகரியமாகவுள்ளன. ஜகன்னாத காட்டில் பலதேவஜீ மந்திரத்தில் தங்கலாம்.

## ஸ்ரீஜகந்நாதம். (புரீ.)

கல்கத்தாவிலிருந்து ஓரிரவு பிரயாணஞ்செய்து இத்தலத்திற்கு வரவேண்டும். புரீ என்றே இத்தலம் பெரும்பாலும் வழங்கப்பெறும். இவ்விடத்து மாகாத்மியம் வருணிக்க முடியாதது. ஸந்நிதியின் அமைப்பு முதலானவை ஒவ்வொன்றும் நெஞ்சைக்கவர்வன. இங்குப் புண்ணிய தீர்த்தங்கள் பல பல வுள்ளன. ஸந்நிதிக்கு அரைமைல் தூரத்தில் சந்தன புஷ்கரிணி யென்கிற மிகப் பெரிய தடாகம் ஸர்வோத்தமமானது. ஸமுத்திரமும் இங்கு ஸமீபஸ்தம். இத்தலத்தில் ஸ்ரீவைஷ்ணவ மடங்கள் அநாதிகாலமாக அமைந்தவை பல இருக்கின்றன. ராஜகோபால மடம், உத்தரபார்சுவ மடம் போன்ற சில பெரிய மடங்கள் மிகவும் ஸௌகரியமான புகலிடங்கள்.

## ஸ்ரீகூர்மம்.

ஸ்ரீ ஜகந்நாதத்திலிருந்து சென்னைக்கு வரும் வழியில் 'சீகாகோளம்ரோட்' என்கிற ஸ்டேஷனில் இறங்கி இத்தலத்திற்கு வரவேண்டும். ஸ்டேஷனிலுருந்து மோட்டார் பஸ்

வில் 18 மைல் தூர வழி கடந்து இத்தலமடையவேண்டும். ஸந்நிதியின் வாய்ப்பும் அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்களின் பக்தி ச்ரத்தைகளும் வாசாமகோசரம். நாடோறும் இரவில் நித்யோத்ஸவம் நடக்குமழகு நன்று.

## ஸிம்ஹாசலம்.

ஸ்ரீகூர்மத்திலிருந்து இத்தலத்திற்கு வருவது. இது விசாகபட்டணத்திற்கு மிக ஸமீபத்திலுள்ளது வெகு அற்புதமான க்ஷேத்ரம். ஆயிரம் படிகள் ஏறிச் செல்லவேண்டும். இத்தலத்து அழகியானுடைய திருமேனி எப்போதும் சந்தனக்காப்பு அணியப் பெற்றிருக்கும். வருஷந்தோறும் ஒரு நாளில் [அதாவது, அக்ஷயத்ருதீயையில்] திருமேனி ஸேவை ஸாதிப்பது வழக்கம்.

## கோதாவரீ.

ஸிம்ஹாசலத்திலிருந்து ராஜமந்த்ரியில் இறங்கி கோதாவரி நதியில் குடைந்தாடப் ப்ராப்தம். கோதாவரி யென்கிற ஸ்டேஷனுமுண்டு.

## க்ருஷ்ணாநதி.

ராஜமந்த்ரியிலிருந்து பெஜவாடாவில் இறங்கி க்ருஷ்ணையில் குடைந்தாட ப்ராப்தம்.

## மங்களகிரி.

பெஜவாடாவிலிருந்து மங்களகிரி யென்கிற புராண க்ஷேத்ரம் அருகிலுள்ளது. இவ்விடத்தில் பானகந்ருஸிம்ஹனுடைய ஸந்நிதி வைபவம் மிக்கது. (குண்டூர் லைனிலுள்ளது.)

## நெல்லூர்.

பெஜவாடாவிலிருந்து சென்னைக்குச் செல்லும் வழியில் நெல்லூர் ப்ராப்தமாகிறது. இது சிறந்த புராண ஸ்தலமாகக் கொண்டாடப்படுகிறது. வடபண்ணை யாற்றங்கரையில் ஸ்ரீரங்கநாதனுடைய ஸந்நிதி வெகு அழகியது.

இவ்வளவோடு உத்தரதேச யாத்திரை ஸமாப்தமாகின்றது. இங்கிருந்து நேரே சென்னைக்குச் செல்லலாம், இடையில் கூடூர் ஜங்ஷனில் இறங்கி வெங்கடகிரி—காளஹஸ்தி—ரேணுகுண்டா வழியாய் திருப்பதிக்கும் செல்லலாம்.

## ஓர் முக்கியமான குறிப்பு.

தென்னாட்டிலிருந்து வடநாட்டு க்ஷேத்ர தீர்த்த யாத்திரை செய்ய விரும்புமவர்கள் அர்க்கோணம் பம்பாய் வழியாகச்சென்று கல்கத்தா பெஜவாடா வழியாகத் திரும்புவதும், கல்கத்தா வழியாய்ச்சென்று பம்பாய் அர்க்கோணம் வழியாய்த் திரும்புவதும் ஆகிய இரண்டு படிகளும் ஒக்கும். முன்னே கயாச்ராத்தம் செய்யவேண்டியவர்கள் கல்கத்தா வழியாகச் செல்வதே சிறக்கும்.

ஸ்ரீகாஞ்சீ. ப்ர. அண்ணங்கராசாரியர்.

**வடநாட்டுத் திருப்பதி யாத்திரை முற்றிற்று.**



ஸ்ரீமதுபயவே. (வானமாமலை.)

**தே. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி**

(ஸிகந்தராபாத். ஸ்ரீலக்ஷ்மீ நாராயணன் ஸன்னிதி ஸர்வாதிகாரி.)

# ஸ்ரீபாஷ்யஸாரார்த்த ஸங்க்ரஹம்—ஜ்யோதிரதிகரண ஸித்தாந்தம்.

(பத்தாவது ஸஞ்சிகையின் தொடர்ச்சி.)

ஆதித்யாதி ஜ்யோதிஸ்ஸே ஜகத்காரணமாகக் கடவதென்கிற பூர்வபக்ஷத்தின்மேல் இனி ஸித்தாந்தம் வருமாறு;— சாந்தோக்யத்தில் *அத யதத: பரோதிவோ ஜ்யோதிர் தீப்யதே* என்றவிடத்தில் மிகச்சிறந்த வொளியுள்ளதாக வோதப்பட்ட ஜ்யோதிஸ்ஸானது ஆதித்யாதி ஜ்யோதிஸ்ஸாக இருக்கத் தகுதியில்லை. ஏனென்னில், அதேயிடத்தில் முந்தின வாக்யத்தில் * பாதோஸ்ய ஸர்வா பூதாநி, த்ரிபாதஸ்யாம்ருதம் திவி * என்பதில் ஸர்வபூதங்களையும் பாதமாகவுடைத்தாயிருக்குந் தன்மையும் த்யுலோகஸம்பந்தமும் முதலானவை சொல்லப்பட்டிருப்பதனுல் " பாதோஸ்ய விச்வா பூதாநி, த்ரிபாதஸ்யாம்ருதம் திவி " என்கிற புருஷஸூக்தத்தினர்த்தம் ப்ரத்யபிஜ்ஞாபிதமாகிறபடியினுலே புருஷஸூக்தத்தில் சொல்லப்பட்ட பரப்ரஹ்மமே இந்த ஜ்யோதிஸ்ஸாகும். ப்ரஸித்தமான ஆதித்யன் முதலிய ஜ்யோதிஸ்ஸை விவக்ஷிக்க நியாயமில்லை.

(இதற்குமேல் சிறியதொரு சங்கை.) சாந்தோக்யத்தில் "காயத்ரீ வா இதம் ஸர்வம்" என்று காயத்ரியை ப்ரஸ்தாவித்து " ததேதத் ருசாப்யுக்தம் " என்று அந்த காயத்ரியைப் பற்றியதாகச் சொல்லப்பட்ட "பாதோஸ்ய ஸர்வா பூதாநி " இத்யாதி மந்த்ரமானது பரப்ரஹ்மத்தைப் பற்றியதாக எப்படியாகும்? என்று சங்கிக்கக்கூடும்; இதற்குப் பரிஹாரம் சொல்லுகிறோம். " காயத்ரீ வா இதம் ஸர்வம் " என்று காயத்ரீ ப்ரஸ்தாவம் அங்கிருப்பது உண்மையே; ஆனுல் காயத்ரீ சப்தத்தினுல், காயத்ரீச்சந்தஸ்ஸு சொல்லப்படுவதாக நினைக்க வேண்டா; ஏனென்ருல், உடனே 'இதம் ஸர்வம்' என்று ஸர்வாத்மத்வம் சொல்லப்பட்டிருக்கின்றது, அது காயத்ரீச்சந்தஸ்ஸுக்குப் பொருந்தமாட்டாதன்ருே. இவ்வளவேயன்று; அந்தப்ரகரணத்தில்—பூதம் ப்ருதிவி சரீரம் ஹ்ருதயம் ஆகிற- இந்நான்கையும் நான்கு பாதங்களாகவுடைமையும் சொல்லப்பட்டிருக்கின்றது. இதுவும் காயத்ரீச்சந்தஸ்ஸுக்குப் பொருந்தமாட்டாதன்ருே. ஆகவே காயத்ரீ சப்தத்தினுல் காயத்ரிக்கு ஸமானமான பரப்ரஹ்மமே சொல்லப்படுவதாகக் கொள்ளவேணும். பரப்ரஹ்மத்திற்கு காயத்ரியோடு ஸாம்யம் எப்படியென்னில்; நான்கு பாதங்களோடு கூடியது காயத்ரி; கீழ்ச்சொல்லப்பட்ட பூத ப்ருதிவீ சரீர ஹ்ருதயங்களாகிற நான்கு பாதங்களையுடையது பரப்ரஹ்மம்; ஆக இவ்வகையினுல் ஸாம்யமென்றுணர்க. 'பரப்ரஹ்மம் காயத்ரீ ஸத்ருசம்' என்று அநுஸந்தானம் செய்வதற்காகவே காயத்ரீ சப்தத்தினுல் அதைச் சொல்லிற்றென்று அறிவது. இதற்கு ஒரு த்ருஷ்டாந்தமுங் காணலாம்; சாந்தோக்யத்திலேயேயுள்ள ஸம்வர்க்க வித்யையில் * தே வா ஏதே பஞ்சாந்யே பஞ்சாந்யே * என்று தொடங்கி * ஸைஷா விராட் * என்று ஓதப்பட்டுள்ளது. அக்நி ஸூர்ய ஜல சந்த்ர வாயு வாக் சக்ஷுஸ் ச்ரோத்ர மநஸ் ப்ராணங்களாகிற பத்துவஸ்துக்களில்—பத்தென்கிற ஸங்க்யையின் ஸாம்யத்தைக்கொண்டு பத்தக்ஷரங்களையுடைய சந்தஸ்ஸுக்கு வாசகமான விராட் சப்தம் ப்ரயோகிக்கப்பட்டிரா நின்றதன்ருே; அதுபோலவே இங்கும் நான்கு பாதங்களுடைமை யென்னுமிவ்விஷயத்தில் ஸாம்யத்தையிட்டு பரப்ரஹ்மத்தினிடத்தில் காயத்ரீசப்த ப்ரயோக முள்ளதென்று கண்டுகொள்வது. ஏவஞ்ச, * பாதோஸ்ய ஸர்வா பூதாநி * என்கிறவிந்த மந்த்ரமானது * காயத்ரீ வா இதம் ஸர்வம் * என்று முன்னே ப்ரஸ்துதமான ப்ரஹ்மத்தையே விஷயமாகவுடையதென்று அறுதியிடக் குறையில்லை.

(இதற்குமேலும் ஒரு சிறியசங்கை.) * பாதோஸ்ய ஸர்வா பூதாநி * என்கிற மந்த்ரமானது பரப்ரஹ்மபரமாகவே யிருக்கட்டும்; ஆனுலும் * அத யதத: பரோ திவோ ஜ்யோதி: * என்று சொல்லப்பட்ட ஜ்யோதிஸ்ஸானது பரப்ரஹ்மமேயென்று நிர்ணயிக்கப்போகாது; ஏனென்னில், முந்தின மந்த்ரத்தில் பரப்ரஹ்மத்தை த்யுலோக ஸம்பந்தியாகச் சொல்லிற்று;

இவ்விடத்தில் *திவஃ பரோ ஜ்யோதி:* என்பதனால் அந்தஜ்யோஸ்ஸானது த்யுலோகத்திற்கு அப்பாற்பட்டதென்று சொல்லிற்று. ஆகவே பரப்ரஹ்மத்திற்கு இங்கு ப்ரத்யபிஜ்ஞை யுண்டாகத் தகுதியில்லை; த்யுலோகஸம்பந்தியானதும் த்யுலோகத்திற்கு அப்பாற்பட்டதும் ஒன்றாயிருக்க முடியாதன்றோவென்று.

இந்த சங்கைக்குப் பரிஹாரம் சொல்லுகிறோம். "வ்ருக்ஷாக்ரே ச்யேநஃ—வருக்ஷாக்ராத் பரதஃ ச்யேநஃ" என்கிற இரண்டுவகையான வாக்யமும் ஒரே பொருளில் பர்யாயமாக ப்ரயோகிக்கப்படுவதுண்டு. மரத்தின் நுனியில் பறவையுள்ளது, மரத்தின் நுனிக்கப்பால் பறவையுள்ளது என்ற இவ்விரண்டு வகையான ப்ரயோகத்திற்கும் தாத்பர்யபேதமில்லை யன்றோ. அதுபோலவே இங்கும் "திவி—திவஃ பரஃ" என்ற விரண்டுவகையான ப்ரயோகமும் ஒரே பொருளில் நிராபாதமாக ஸம்பவிக்கக் கூடுமாதலால் *த்ரிபாதஸ்யாம்ருதம் திவி* என்று முன்னேப்ரஸ்துதமான பரப்ரஹ்மத்திற்கு * அத யததஃ பரோ திவோ ஜ்யோதிஃ * என்பதனால் ப்ரத்யபிஜ்ஞையுண்டாகக் குறையேயில்லை. ஜ்யோதிச் சப்தத்தினால் நிர்தேசிக்கப்பட்ட பரப்ரஹ்மத்திற்கு கௌக்ஷேயஜ்யோதிஸ்ஸோடு ஐக்யம் சொல்லியிருப்பதும் பொருந்தும்; ஒரு பலவிசேஷத்தைப்பற்றி பரப்ரஹ்மஜ்யோதிஸ்ஸை கௌக்ஷேயஜ்யோதிஸ்ஸாக அநுஸந்தானம் செய்யும்படி ஓதிற்றென்று கொள்ளக்கடவது. ... .... *

ஸ்ரீபாஷ்ய ஸாரார்த்த ஸங்க்ரஹத்தில்
ஜ்யோதிரதிகரணம் முற்றிற்று.

## ஸ்ரீபாஷ்யஸாரார்த்த ஸங்க்ரஹத்தில்—இந்த்ர ப்ராணாதிகரணம்.

ஜ்யோதிஸ்ஸென்று வழங்கக் கூடியதான ஆதித்யாதிகளுக்கு ஜகத்காரணத்வம் கிடையாதென்று முன்னதிகரணத்தில் ரூதலிக்கப்பட்டது. இப்போது, அக்நி ஆதித்யன் முதலியவர்களுக்கு அதிபதியாக ப்ரஸித்தனான தேவேந்திரனுக்கு ஜகத்காரணத்வத்தை ஆசங்கித்துப் பரிஹரிக்கப் படுகிறது.

(ஸூ-௭) प्राणस्तथाऽनुगमात् ॥

### ப்ராணஸ் ததாநுகமாத். 1—1—29.

இங்கு ப்ராணசப்தம் இந்த்ரனுக்கும் உபலக்ஷணம். *பேதவ்யபதேசாச் சாந்ய: * (1—1—22.) என்கிற ஸூத்ரத்திலிருந்து அந்யஃ என்கிறபதம் அநுவர்த்தித்து வருகிறது ஆகவே, ப்ராண இந்த்ர பதங்களினால் நிர்தேசிக்கப்பட்டவன் ப்ரஸித்தனான இந்திரனிற் காட்டில் வேறுபட்டவன்; (ஏனென்னில்) இந்த்ராதிகளிற் காட்டில் வேறுபட்டவனுக்குரிய தன்மைகள் மேல்வாக்யங்களிலே ஓதப்பட்டிருப்பதனால்—என்று ஸூத்ரப்பொருள் தேறுகிறது.

கௌஷீதகியென்னு முபநிஷத்தில் ப்ரதர்தந வித்யாப்ரகரணத்தில் 'மநுஷ்யனுக்கு மோக்ஷோபாயமாக எது மிகவும் ஹிதமானதோ அதையெனக்குச் சொல்லவேணும்' என்று ப்ரதர்தநனால் கோரப்பட்ட இந்திரன் * ப்ராணோஸ்மி ப்ரஜ்ஞாத்மா தம் மாம் ஆயுரம்ருதமிதி உபாஸ்வ * என்று தன்னையுபாஸிக்கும்படி சொல்லுகையாலே இந்திரனுக்கு உபாஸ்யத்வம் ஓதப்பட்டதாயிற்று. மேல் அந்தப்ரகரணத்திலேயே அந்த இந்திரனைக் குறித்தே *ஸ ஏஷ ப்ரஜ்ஞாத்மா ஆநந்தோஜரோம்ருத:, ஸ ந ஸாதுநா கர்மணா பூயாந்நோ ஏவாஸாதுநா கர்மணா கநீயாந்* என்று ஓதப்பட்டுள்ளது. இங்குச் சொல்லப்பட்டுள்ள நிருபாதிகப்ராஜ்ஞத்வம், நிருபாதிக ஆநந்தசாலித்வம், அஜரத்வம், அம்ருதத்வம் முதலானவைகளும், கருமபலன் ஸ்பர்சியாமையும், ஸர்வ பூதாதாரத்வமும் இங்ஙனமாக மற்றுஞ் சொல்லப்படுகிற தன்மைகளும் பரமாத்மாவினிடத்தில் ஸம்பவிக்கக் கூடியவைகளே யல்லது இந்திரனென்கிற ஜீவனிடத்தில் அடியோடு ஸம்பவிக்கமாட்டா. ஆகவே உபக்ரமத்தில் * மாமுபாஸ்வ * என்று

மோக்ஷோபாயமான உபாஸனைக்கு இலக்காகச் சொல்லப்பட்டவன் இந்திரனாக இருக்க முடியாது ; * தமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி, நாந்ய: பந்தா அயநாய வித்யதே * என்று பரமாத்மோபாஸநத்திற்கே மோக்ஷோபாயத்வம் நிஸ்ஸந்தேஹமாக வேதாந்த ஸித்தமாயிருப்பதாலும், மேலேயுள்ள * ஏஷ ஹ்யேவ ஸாது கர்ம காரயதி தம் * என்பதனால் * யமாத்மாநமந்தரோ யமயதி * என்கிற அந்தர்யாமி ப்ராஹ்மணச்ருதியின் பொருள் நினைப்பூட்டப்படுவதாலும், அந்தச்ருதியானது ஸுபாலோபநிஷத்தோடு ஸமாநார்த்தகமாகி பரமாத்மவிஷயகமாகையாலும், முமுக்ஷுக்களுக்கு உபாஸ்யனாக இந்திரனால் சொல்லப்பட்டவன் ப்ராண—இந்த்ரபத நிர்திஷ்டனான ஜீவனாக இருக்கமுடியாது, இந்த்ரப்ராணசரீரகனான பரமாத்மாவாகவேயிருக்கத் தகுதியுள்ளது என்றவாறு.

இங்குப் பூர்வபக்ஷம் :—கௌஷீதகியுபநிஷத்தில் "ப்ரதர்தநோ ஹ வை தைவோதாஸிரிந்த்ரஸ்ய ப்ரியம் தாம உபஜகாம" என்று தொடங்கி இந்திரனுக்கும் ப்ரதர்தநனுக்கும் ஒரு ஸம்பாஷணை நடந்ததாக எடுத்துக்காட்டி, 'மநுஷ்யனான எனக்கு எது மிகவும் ஹிதமானதோ அதை நீயே ஆராய்ந்து உபதேசிக்கவேணும்' என்று இந்திரனை நோக்கி ப்ரதர்தநன் கூற, அதற்கு இந்திரன் "மாமேவ விஜாநீஹி ஏததேவாஹம் மநுஷ்யாய ஹிததமம் மந்யே யந்மாம் விஜாநீயாத்" என்று தன்னையுபாஸிப்பதையே மநுஷ்யனுக்கு ஹிததமமாகவுபதேசித்து, தன்னுடைய பெருமையைச் சொல்லப்புகுந்து தான் எவ்வளவு அக்ருத்யங்கள் செய்தாலும் அக்ருத்யபலன் தன்னைவந்து அணுகாதென்பதான பெருமையைச் சொல்லி "ஸ யோ மாம் விஜாநீயாத்" இத்யாதியாலே, தன்னையுபாஸிப்பவனுக்கு அக்ருத்யபலன் ஒட்டாதென்பதையும் சொல்லி "ப்ராணோஸ்மி ப்ரஜ்ஞாத்மா தம் மாம் ஆயுரம்ருதமித்யுபாஸ்வ" என்று தன்னையுபாஸிக்கும்படியும் சொன்னதாகக் காண்கிறது. இங்கு "த்வாஷ்ட்ரம் அஹநம்" என்று த்வாஷ்ட்ரனை நான் கொன்றேனென்று சொல்லியிருக்கையாலே இந்த லிங்கத்தினால் வக்தா இந்திரனேயென்பது நன்கு தெரிகிறது. அவனையுபாஸிப்பது ஹிததமமென்றும் தெரியவருகிறது. மோக்ஷத்திற்கு உபாயமான உபாஸனமே ஹிததமமாகும். ஆகவே முமுக்ஷுக்களுக்கு உபாஸ்யன் இந்திரனே யென்றதாகத் தேறுகின்றது. அப்படிப்பட்ட உபாஸ்யத்வம் ஜகத்காரணமான வஸ்துவுக்கேயாகும் ; * காரணம் து த்யேய: என்று ச்ருதியே ஓதியிருக்கையாலே ஆகவே இந்திரனே ஜகத்காரணபூதனென்று ஸித்திக்கின்றது.—என்று பூர்வபக்ஷம் ப்ராப்தமாக,

இதன்மேல் ஸித்தாந்தம்வருமாறு—* தமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி * இத்யாதிகளில் பரம புருஷனுக்கே உரியதாக ஓதப்பட்டிருக்கிறது முமுக்ஷூபாஸ்யத்வம். மோக்ஷத்தைக் குறித்து உபாயமாகின்ற உபாஸனைக்கு இலக்காகுந்தன்மை பரமபுருஷனுக்குத் தவிர வேறொருவனுக்கும் பொருந்தாதென்பது தெரிந்திருக்க ஜீவர்களில் ஒருவனான இந்திரன் 'மாம் உபாஸ்வ' என்று அந்த முமுக்ஷூபாஸ்யத்வம் தனக்குள்ளதாக எப்படிச் சொல்லுகிறானென்று ஆராயவேணும். ஆராயுமளவில், மாம் உபாஸ்வ—என்னை சரீரமாகக்கொண்ட பரமாத்மாவை உபாஸிக்கக்கடவை என்றதாகவே பொருள் தேறும். மாம் என்றதற்கு ப்ரஸித்தனான இந்திரன் பொருளன்று, பரமாத்மாவே பொருள் என்று திடமாகவுணரலாகும். சரீரத்தைச் சொல்லும் சப்தங்கள் சரீரியளவும் சென்று போதத்தையுண்டாக்குமென்கிற சாஸ்த்ரதத்துவமறிந்தே இந்திரன் 'மாம் உபாஸ்வ' என்றான். ப்ருஹதாரண்யகோபநிஷத்தில் வாமதேவர் * அஹம் மநுரபவம் ஸூர்யச் ச * இத்யாதியில் தன்னைச் சொல்லுகிற அஹம் சப்தத்தினால் பரமபுருஷனை வ்யவஹரித்திருக்கின்றார். அப்படியே இந்திரனும் இங்கு தன்னைச் சொல்லுகிற மாம் என்கிற சப்தத்தினாலும் ப்ராணவாசக சப்தத்தினாலும் பரமபுருஷனையே குறிப்பிடுகின்றானென்பது நிச்சயிக்கப்படுகிறது. அந்த ப்ரகரணத்திலுள்ள சப்தங்களெல்லாம் இந்த நிர்ணயத்திற்கு மிகவும் உபகாரகங்களாயிருக்கின்றன. அந்த கௌஷீதகியுபநிஷத்திலேயே (3—9.) * தத் யதா ரதஸ்ய அரேஷு நேமிரர்ப்பிதா, நாம்பள அரா அர்ப்பிதா:, ஏவமேவ ஏதா பூதமாத்ரா: ப்ரஜ்ஞாமாத்ராஸு அர்ப்பிதா:, ப்ரஜ்ஞாமாத்ரா: ப்ராணே அர்ப்பிதா: ஸ ஏஷ ப்ராண ஏவ ப்ரஜ்ஞாத்மா ஆநந்தோஜ

ரோம்ருத: * என்றோதியுள்ளவிடத்தில் ப்ராண—ப்ரஜ்ஞாத்ம—அம்ருத சப்தங்களாலே "ப்ராணோஸ்மி ப்ரஜ்ஞாத்மா தம் மாம் ஆயுரம்ருதமிதி உபாஸ்வ" என்று சொல்லுகிறவனை ப்ரத்யபிஜ்ஞாபனம்பண்ணி, பரமாத்மாவுக்கே அஸாதாரணமான சேதநா சேதந ஸகலாதாரத்வம் ரத-நேமி-அர-நாபி த்ருஷ்டாந்தங்களினால் சொல்லப்பட்டிருத்தலாலும், "ஸ ஏஷ ப்ராண ஏவ ப்ரஜ்ஞாத்மா ஆநந்தோஜரோம்ருத:" என்பதனாலே ஸுபாலோபநிஷத்தில் ஐந்தாவது கண்டத்தில் சொல்லப்பட்ட "தமாத்மாநமுபாஸீத, அஜரம் அம்ருதம் அபயம்" இத்யாதியை நினைப்பூட்டுகையாலும், மேலே * ஏஷ ஏவ ஸாது கர்ம காரயதி* இத்யாதியாலே-அந்தர்யாமி ப்ராஹ்மணத்தில் * ய ஆத்மாந மந்தரோ யமயதி * என்றவிடத்தில் பரம புருஷனுக்கே அஸாதாரணமாக அறிந்துகொள்ளப்பட்ட 'நல்வினை தீவினைகள் செய்விக்கை'யாகிறவொரு பெருமை ஏஷ: என்கிற ஏதச் சப்தத்தினால் பராமர்சிக்கப்பட்ட ப்ரக்ருத வக்தாவினிடத்தில் ஓதப்பட்டிருக்கையாலும் "மாம் உபாஸ்வ" என்றவிடத்து உபாஸ்யனாகச் சொல்லப்பட்டவன் பரமபுருஷனேயன்றி ப்ரஸித்தனான இந்திரனல்லன் என்பது திண்ணமாக நிர்ணயிக்கப் படுகிறது.

த்வஷ்டாவின் மகனான த்வாஷ்ட்ரனைக் கொன்றேனென்று இந்திரன் தன்னுடைய அஸாதாரண சேஷ்டிதமொன்றைச் சொல்லியிருக்கிறான், இது இந்திரனிடத்திலன்றிப் பரமபுருஷனிடத்தில் பொருந்தா தென்பது வாஸ்தவமே; இதற்கு ஸமாதானம் கேண்மின்; இங்கு இந்திரன் தனக்கு அந்தர்யாமியான பரமாத்மாவை ஸ்வசரீரகனாகவும் ப்ராணசரீரகனாகவும் ஆநந்தத்வாதி குணவிசிஷ்டனாகவும் மூன்றுபடியாக உபாஸிக்கவேணுமென்று உபதேசிக்க விரும்பியிருக்கிறான்; ஆகவே இங்குத் தன் பெருமையைக் கூறிக்கொள்ளுதலும் தான் அனுஷ்டிக்கிற வொரு ப்ரஹ்மவித்யையின் பலனுரைத்தவாறு என்று கொள்ளக் கடவது. ... ... ... .... *

இந்த்ர ப்ராணாதிகரணம் முற்றிற்று.

ஸ்ரீகாஞ்சீ. ப்ர. அண்ணங்கராசாரியர் இயற்றிய

**ஸ்ரீபாஷ்யஸாரார்த்த ஸங்க்ரஹத்தில்**

**முதலத்யாயத்தின் முதற்பாதம் முற்றிற்று.**

---

## சந்தாதாரர்களுக்கு அறிவிப்பு.

சென்ற வருஷத்துச் சந்தாவையும் புதுவருஷச் சந்தாவையும் அனுப்பியுள்ள மஹான்களுக்கு நாம் நமது நன்றியறிவை அன்புடன் செலுத்துகிறோம். சந்தா செலுத்தாமலும், அதைப்பற்றி ஒன்றுமே தெரிவிக்காமலுமிருக்கின்ற பெரியார்களுக்கும் இப்போது நாம் பத்திரிகையனுப்பியிருக்கிறோம். உடனே அவர்கள் தமது சந்தாத் தொகையை அனுப்பிவிடுவார்களென்று நம்பியிருக்கிறோம். அப்படியனுப்ப ஸௌகரியமில்லாதவர்கள் இப்பத்ரிகையையே திருப்பியனுப்பிவிட்டாலும் அபிப்ராயமறிந்துகொள்வோம்.

இப்படிக்கு

**மானேஜர்**

ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபா ஆபீஸ்,

சின்ன காஞ்சீபுரம்.

(10—10—49.)



ஸ்ரீ வானமாமலை மடம் ஆஸ்தான வித்வான்

ஸ்ரீமதுபயவே. தே. திருமலாசாரியர் ஸ்வாமி,

வானமாமலை.

## உபயராமாயண கதாஸாரம்—வான்மீகப் பகுதி.

### ஸீதா விவாஹமான பின் அயோத்திக்குத் திரும்பும் கெட்டம்.

[எழுபத்து நான்காவது ஸர்க்கம் முதல் பாலகாண்ட முடிவுவரையிலுள்ள கதைப்பகுதி.]

### விவாஹம் முடிந்தபின் தசரதர் அயோத்தியை நோக்கிப் புறப்பட்டு வருகையில் பரசுராமர் எதிர்த்து வருதல்.

அன்றிரவு கழிந்த பின்னர் விசுவாமித்திர முனிவர் தசரதரிடத்தும் ஜனகரிடத்தும் விடை பெற்றுக்கொண்டு தம் இருப்பிடமான இமயமலைக்குப் போகலுற்றார். பிறகு தசரதரும் ஸகுடும்பராய் ஜனகரிடம் விடை பெற்றுத் தமது அயோத்திமா நகர்க்குப் புறப்படலாயினர். வழி விடுவதற்காக ஜனகரும் சிறிது தூரமளவும் பின்தொடர்ந்து வந்து விசேஷமாகச் சீதனமும் கொடுத்து விடை பெற்றுக்கொண்டு மிதிலைமா நகர்க்குத் திரும்பினர்.

குடும்பங்களுடனும் முனிவர்களுடனும் படைவீரர்களுடனும் தசரத மன்னவன் அயோத்தி நகர் நோக்கிச் சென்றுகொண்டிருக்கையில் அசுப நிமித்தங்கள் சிலவும் சுபநிமித்தங்கள் சிலவும் தோன்றின. அவற்றைக் கண்டு தசரதர் கலங்கித் தடுமாறி நின்று 'இவற்றிற்குப் பலன் யாது?' என்று வஸிஷ்ட முனிவரைக் கேட்க, அம்முனிவர் "மன்னவர் மணியே! ஆகாயத்திற் சில பறவைகளின் பயங்கரமான கூவுதலாகிற அசுபநிமித்தம் நேர்கின்றபடியால் அதற்குப் பலனாக ஒரு கெடுதல் ஏற்படும்போல் தோன்றுகிறது. நிலத்தில் சில விலங்குகள் நம்மை வலஞ் செய்து செல்லுதலாகிற சுப நிமித்தம் நேர்கின்றபடியால் அதற்குப்பலனாக அந்தக் கெடுதல் உடனே தொலைந்திடும்போல் தோன்றுகிறது; மனம் துயருறவேண்டா" என்று இனிதாக மறுமொழி கூறினர்.

இந்தப் பிரஸ்தாவம் நடந்துகொண்டிருக்கும்போதே, அங்கு நிலம் முழுவதும் நடுங்கவும் மரங்கள் முறிந்துவிழவும் ஒரு பெருங்காற்று உண்டாயிற்று. இரவியும் இருள் மூடப்பெற்றனன். திசைகளும் மறையலுற்றன. தசரத மன்னவனது சேனைகள் முழுவதும் புழுதி படிந்து மழுங்கிப்போயின. வஸிஷ்டரும் சில முனிவர்களும் தசரதரும் அவரது திருக்குமாரர்களும் தவிர மற்றையோர் யாவரும் மூர்ச்சையடைந்து கிடந்தனர். நிலைமை இத்தகைத்தாக, மிக பயங்கரமான உருவமுடைய ஜமதக்கினி புத்திரரான பரசுராமர் தோளின்மீது கோடாலிப் படையைச் சுமந்துகொண்டு வில்லையும் அம்புகளையும் கையிலேந்திக்கொண்டு தோற்றமாயினர். அன்னவரைக்கண்ட முனிவர்களிற் சிலர், "ஒரு க்ஷத்திரியனால் தம்முடைய தந்தை வதைக்கப்பட்டபோது அதற்காக க்ஷத்ரியகுலம் முழுவதினுமே கறுக்கொண்டவரான இவர் இப்போது க்ஷத்ரிய வதம் செய்யாமலிருப்பரோ!" என்று பேசிக்கொண்டனர். மற்றுஞ் சிலர், "முன்னமே க்ஷத்திரியர்களை வதை செய்து கோபந்தணியப்பெற்றவிவர் மீண்டும் க்ஷத்திரிய வதம் செய்யக் கருதுவரோ!" என்று பேசிக்கொண்டனர். பிறகு முனிவர்கள் யாவரும் பரசுராமரை நோக்கி, "ராமரே! வாரும் வாரும்" என்று இனிமையாக விளித்துப் பூஜை செய்ய, அப்பூஜையைப் பெற்றுக்கொண்ட பரசுராமர் தசரதராமனை நோக்கி மேல்வருமாறு கூறலுற்றார்.

### பரசுராமர் சைவ வைஷ்ணவ தனுசுகளின் வரலாறுகளைக் கூறுதலும் தமது கையிலுள்ள வைஷ்ணவ தனுசை நாணேற்றுமாறு ராமனை வேண்டுதலும்.

"தசரதாத்மஜனான ராமனே! உனது வீரத்தன்மை வீறு பெற்றதென்று கேள்விப்படுகிறேன்; நீ சிவதனுசை முறித்தது முதலிய கதைகள் முழுவதையும் கேட்டிருக்கிறேன். நீ உண்மையில் மஹா வீரனாயிருப்பாயாயின், இப்போது நான் கொண்டு வருகின்ற இந்த

வில்லை வளைத்து அம்பு தொடு, பார்ப்போம். இதை நீ செய்தாயாயின் பிறகு உன்னை நான் வீரனாகவேகருதிக் கைச்சண்டைக்கும் இடந்தருவேன்." என்று பரசுராமர் ஸ்ரீ ராமனை நோக்கிக் கூற, தசரத மன்னவன் அச்சொல்லைக் கேட்டதும் முகம் வாடி மனமிளகி ஒன்றுந் தோன்றாதவராய்க் கைகளைக் கூப்பிக்கொண்டு "ஸ்வாமிந்! நீர் பிராமணராயிருக்கின்றீர்; க்ஷத்ரிய குலத்தில் நீர் வைத்துள்ள கோபத்தை விட்டிட்டு, சிறு குழந்தைகளான என் புதல்வர்கட்கு அபயமளித்தருளல் வேண்டும்: பரம வைதிகமான ப்ருகு வம்சத்தில் அவதரித்த நீர் 'இனி நான் ஆயுதத்தைக் கையிலெடுப்பதில்லை' யென்று இந்திரனிடத்துப் பிரதிஜ்ஞை செய்து ஆயுதத்தை விட்டொழித்து அறத்திற் பற்றுள்ளவராகிப் பூமி முழுவதையும் காசியபர்க்குத் தானஞ் செய்துவிட்டு வனத்திற் போந்து மகேந்திர மலையின்கண் வாழ்ந்து வந்தீர்; அப்படிப்பட்ட நீர் இப்போது எமது போதாத காலத்தினால் இங்கு வந்து சேர்ந்தீர்; அந்தோ! ராமனை வதைக்க நினைக்கின்றீர்; ராமனொருவனுக்கு ஒரு கேடு விளைந்தால் நாங்கள் அனைவரும் இறந்தொழிந்தோமாவோம்" என்று பரசுராமரை நோக்கிக் கனமான வருத்தந் தோன்றக் கதறினன்.

பரசுராமர் அக்கட்டுரையைக் கருத்திற் கொள்ளாமலே ஸ்ரீராம பிரானையே நோக்கி, "தேவலோகத்தில் விசுவகருமாவினால் பெருமுயற்சி கொண்டு நிருமிக்கப்பட்ட இரண்டு விற்களே மிக்க சிறப்புப் பெற்றவை; அவற்றுள் ஒரு வில்லானது முன்பு முப்புரங்களை யழிக்க வேண்டிப் போர்புரியக் கருதிய சிவபிரானுக்குத் தேவர்களால் தரப்பட்டது. அந்த வில்லே மிதிலைமா நகரில் உன்னால் முறிக்கப்பட்டது. மிக்க பெருமைபெற்ற மற்றொரு வில் இதுகாண்; இது விஷ்ணுவினுடையது. முன் சிவபெருமான் திரிபுர சங்காரஞ் செய்தபின் எல்லாத் தேவர்களும் சிவனுடையவும் விஷ்ணுவினுடையவும் பலாபலத்தைக் கண்டறியக் கருதி 'யாருடைய வலிமை வீறு பெற்றது?' என்று பிரமனைக்கேட்க, அப்பிரமன் சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் விரோதத்தை மூட்டிவிட, அவ்விருவரும் கோரமான யுத்தம் செய்தனர்; அப்போது விஷ்ணுவின் 'ஹூம்' என்கிற ஒலியினால் சிவபிரானது வில் சிதைந்ததாயிற்று. உடனே மஹாதேவர் அடங்கி நின்றனர். இனிப் போர் நிகழ வேண்டாவென்று தேவர் முனிவர் முதலாயினோரும் கேட்டுக்கொண்டனர். விஷ்ணுவின் விக்கிரமத்தினால் சிவனது வில் முறிந்ததுகண்ட முனிவர்களும் தேவர்களும் அப்போது விஷ்ணுவை அதிக வைபவம் பொருந்தியவராக நிச்சயித்தனர். அத்தருணத்தில் மிக்க சீற்றமடைந்த சிவபெருமான் தனது கையில் இற்றுப்போன அந்த வில்லை விதேஹ தேசத்து மன்னவர்களுள் ஒருவரான தேவராதரிடத்திற் கொடுத்தனன். விஷ்ணு தன் கையிலிருந்த வில்லை எனது பாட்டனாராகிய ரிசீகரிடத்திற் கொடுக்க, அவர் தமது புத்திரரான ஜமதக்நிக்குக் கொடுத்தார்; அதுவே இப்போது என் கையிலுள்ளதுகாண். எனது தந்தை ஆயுதத்தை விட்டிட்டுத் தவமியற்றிக் கொண்டிருக்கையில் தாமஸ புத்தி வாய்ந்த கார்த்தவீரியார்ஜுனன் அவர்க்கு மரணத்தை விளைவித்தனன். அச்செய்தியை நான் கேட்டுக் கோபங்கொண்டு, உலகத்திற் பிறக்கிற க்ஷத்திரியர்களையெல்லாம் உடனுக்குடனே வதஞ்செய்து நிலமுழுவதையுங் கைப்பற்றி, அதனையெல்லாம் ஒரு வேள்வியின் முடிவில் காசியபர்க்குத் தக்ஷிணையாகத் தந்துவிட்டு மகேந்திரமலை சென்று தவமியற்றிக்கொண்டிருந்தேன். நீ சிவதனுசை முறித்த செய்தியைக் கேட்டு விரைந்து வந்தேனிங்கு. ஏற்கெனவே இற்றுப்போயிருந்த அந்தவில்லைப் போலன்றித் திண்ணிதாயிராநின்ற இந்த விஷ்ணுதனுசைக் கை நீட்டி வாங்கிக் கொள்: இது என்னாலாகாதென்று சொல்லிவிடாமல் க்ஷத்ரிய தருமத்தை முற்கொண்டு இதை நீ வாங்கிக்கொள்ளவே வேணும். இதில் நீ அம்பு தொடுக்கவும் வேணும். இதற்கு வல்லையாகில், அடுத்தபடியாக நீயும் நாமும் கைச் சண்டை கொள்வோம்" என்று கூறினர்.

ஸ்ரீராமன் பரசுராமருடைய செருக்கையடக்கின செய்தி கூறல்.

இங்ஙனம் பரசுராமர் சொன்ன சொற்களைக் கேட்ட ஸ்ரீராமன், அவரைப்போல் தாமும் ஆரவாரம் செய்யாமல், தந்தை அருகிலிருப்பதுபற்றி அடக்கங்கொண்டு உரத்த குரலின்றி "ஸ்வாமின்! உமது தந்தையை ஒரு க்ஷத்திரியன் கொன்றதற்காக க்ஷத்திரியப் பூண்டையெல்லாம் இருபத்தொருபடிகால் நீர் கருவழித்த கடுஞ்செயலை நானுமறிவேன்; அது நன்றே. நீர் என்னை வீரியமற்றவனாகவும் க்ஷத்திரிய தருமப்படி போர்புரிய வல்லமையற்றவனாகவும் நினைத்து அவமதிப்பாகப் பேசின பேச்சு நியாயமற்றது; எனது தேஜஸ்ஸையும் வலிமையையும் இதோ காட்டுகின்றேன், பாரும்" என்று சொல்லி அப்பரசுராமரது கையிலிருந்த வில்லையும் அம்பையும் அவலீலையாகக் கைப்பற்றி உடனே நாணேற்றி அம்பு தொடுத்துச் சிறிது கோபக்குறியுடன், "பரசுராமரே! நீர் அந்தணராயிருத்தல் பற்றியும் விச்வாமித்திரர்க்கு உறவினராயிருத்தல் பற்றியும் எனக்குப் பூஜிக்கவுரியவராகின்றீர்; ஆதலால் உமது உயிரைக் கவருமாறு உம்மீது அம்பு எய்யகில்லேன்; உமது பாதங்களிலுள்ள சக்தியையாவது, தவவலிமையினால் நீர் சேமித்து வைத்திருக்கின்ற உலகங்களையாவது நாசஞ் செய்திடப்போகின்றேன்; இரண்டில் எது உமக்கு விருப்பமானது? சொல்லும், இப்போது நான் தொடுத்த அம்பானது ஏதேனுமொன்றைச் செய்தன்றி நில்லாது" என்று கூறினன்.

அப்போது நிகழநிற்கும் மிக அற்புதமான செய்கையைக் காணும்பொருட்டு முனிவர் தேவர் கந்தருவர் இயக்கர் அரக்கர் முதலிய பலரும் அங்குக் குழாங் கூடி நின்றனர். ஸ்ரீராமபிரான் விஷ்ணு தனுசை வாங்கிக் கையிலேந்தி நிற்க, உலகமெல்லாம் திகைக்க, பரசுராமர் வீரியமிழந்தவராகித் திகிலடைந்து ஸ்ரீராமனை நோக்கி "மஹாநுபாவனே! உன்னை ஸாக்ஷாத் நாராயணமூர்த்தியாக நான் அறுதியிடுகின்றேன்; முன்பொருகால் பூமி முழுவதையும் நான் காசியபர்க்குத் தானம் செய்துவிட்டபடியால் அவர்க்கு அதீனமான பூமியில் நான் இருக்கத் தகுதியற்றவனாயிருக்கின்றேன்; பகலில் எங்குத் திரிந்தாலும் இரவில் நான் பூமியில் வஸிப்பதில்லை; மகேந்திரமலையிற் போயிருப்பேன். ஆதலால் என் காலிலுள்ள சக்தியை அடிக்காமல் தவவலிமையை அடித்திடுதல் நலம். மூவுலகுக்கும் நாதனான உன்பால் நான் தோல்வியடைந்ததனால் எனக்குச் சிறிதும் அவமானமில்லை; ராம! இவ்வம்பை எனது புண்ணிய கருமங்களின்மீது எய்ய வேண்டுகிறேன். எய்தால் அதை நான் பார்த்துவிட்டு மகேந்திரமலைக்குச் சென்று சேர்ந்திடுவேன்" என்று வினயம்படக் கூறினர். இராமபிரான் அவ்வண்ணமாகவே அம்பை எய்தவளவில்; பரசுராமர் தாம் தமது வலிமையினால் சேமித்துவைத்திருந்த புண்ணிய லோகங்கள் பாறவடிக்கப்பட்டனவாகவுணர்ந்து இராமனை வலம் வந்து விடைபெற்று மகேந்திரமலைக்கு விரைந்து சென்றார். பிறகு திசைகளெல்லாம் இருள் நீங்கி ஒளிமிக்கன. தேவர் முனிவர் முதலாயினோர் இராமனை மிகவும் புகழ்ந்து சென்றனர்.

தசரதன் முதலானோர் யாவரும் அயோத்தி நகர்வந்து சேர்ந்து இனிது வாழ்ந்தமை கூறல்.

பரசுராமர் சென்றபின் ஸ்ரீராமபிரான் ப்ரஸன்னராகி அந்த விஷ்ணு தனுசை வருணனுடைய கையில் கொடுத்திட்டார். வஸிஷ்டர் முதலிய முனிவர்களையும் வணங்கினார். தந்தைக்கும் தேறுதல்கூறி இனி அயோத்தி நகர்க்குப் புறப்படுமாறு சேனைகட்குக் கட்டளையிடவேணுமென்றார்.

பிறகு தசரதன் பரசுராமன் பங்கமடைந்து போய்விட்ட செய்தியை யுணர்ந்து மகிழ்ந்து இரண்டு கைகளாலும் இராமனைக் கட்டியணைத்து உச்சிமோந்து மயிர்க்கூச்

செறிந்து தானும் தனது புதல்வர்களும் அன்றுதான் பிறந்தார்களாக நினைத்தெழுந்து அயோத்திக்கு விரைந்து செல்லுமாறு சேனைகட்குக் கட்டளையிட்டுத் தானும் புறப்பட்டான்.

ஆனந்தத்துடன் எதிர்பார்த்திருக்கின்ற ஜனங்கள் நிறைந்தும், பலவகை அலங்காரங்கள் செய்யப்பெற்றும், வாத்திய கோஷங்கள் மல்கப்பெற்றும் விளங்குகின்ற அயோத்தி மாநகரில் சென்று சேர்ந்து தசரதமன்னவன் தனது அரண்மனையினுட் புகுந்தான்.

அப்போது உற்ற்றுறவினர்கட்கு உண்டாயிருந்த களிப்பு வருணிக்க முடியாதது. கௌசலை முதலிய ராஜபத்தினிகள் மூவரும் மணமக்களுக்கு மிக்க உபசாரங்கள் செய்வதில் நோக்குடையராகி அந்த மணுட்டுப் பெண்கள் நால்வரையும் தங்கள் அந்தப்புரத்திற்கு அழைத்துக்கொண்டு போனார்கள்.

அந்த மணுட்டுப் பெண்களும் சிறந்த அலங்காரங்களைச் செய்துகொண்டு தேவாலயங்களிற் சென்று பூஜைகளைச் செய்தனர். வணங்கவேண்டிய பெரியார்களை யெல்லாம் வணங்கி விட்டு அவர்கள் தம் தம் கணவருடன் கூடிக்களித்திருந்தனர்.

ஸ்ரீராமன் முதலிய திருக்குமாரர்களும் நண்பர்கட்கு இனியவர்களாய்த் தந்தைக்கு உரிய பணிவிடைகளைச் செய்துகொண்டு களித்திருந்தனர்.

இங்ஙனம் சிலநாட்கள் சென்றபின் தசரத மன்னவன் பரதனை விளித்து, 'குழந்தாய்! உன்னைக் கேகயநாட்டிற்கு அழைத்துச் செல்வதற்காக உன் அம்மானாகிய யுதாஜித்து முன்னமே இங்கு வந்திருக்கிறானல்லவா? மிதிலை மாநகரிலேயே வந்து சேர்ந்து உன்னை யனுப்பும்படி கேட்டுக்கொண்டாரல்லவா? அவருடன் நீ செல்வது நன்று' என்று கூற. பரதன் தாய்மாரிடத்தும் இராமபிரானிடத்தும் நியமனம் பெற்றுக்கொண்டு சத்ருக்கனனோடுகூடிக் கேகயநாட்டிற்குப் புறப்பட்டனன்.

இங்ஙனம் பரதசத்துருக்கனர்களை யழைத்துக்கொண்டு சென்ற யுதாஜித் தென்பவர் நாளடைவில் கேகயநாட்டிற் சென்று சேர்ந்து தமது தந்தையை மகிழ்வித்தனர்.

அயோத்தியில் இராமனும் லக்ஷ்மணனும் தாய் தந்தையர்க்கும் வஸிஷ்டர் முதலான குரவர்களுக்கும் ஏற்ற பணிவிடைகளை உரியகாலங்களில் குறையறச் செய்துகொண்டு வாழ்ந்து வந்தனர். விசேஷித்து இராமன் தந்தையினது கட்டளையையே சிரமேற்கொண்டு நகரத்தார்க்குச் செய்யவேண்டிய ஹிதங்களையும் ப்ரியங்களையும் ஒழுங்குபடச் செய்து வந்தனன். இத்தகைய இராமபிரானது திருக்குணங்கள் தசரத சக்கரவர்த்தியின் மனத்தை மிகவும் கவர்ந்தன. நகரிலுள்ள அனைவருமே அந்த ஸ்ரீராம குணங்களில் மிகமிக ஈடுபட்டிருந்தனர். இராம பிரானுடைய புகழும பராக்கிரமமும் எங்கும் மிக்க விளக்கமுற்றன.

இராமனுக்கும் ஸீதைக்கும் இருந்த அன்பு அளவிட முடியாதது. இருவரும் ஒத்த மனத்தராய் ஸகலவித போகங்களையும் அழகாக அனுபவித்துக் கொண்டிருந்தனர். ஸீதை தன்னுடைய தேஹ குணங்களாலும் ஆத்ம குணங்களாலும் இராமனுடைய மிக்க அன்புக்கு இலக்காயிருந்தனள். அங்ஙனமே இராமபிரானும் பிராட்டியினது அளவு கடந்த அன்புக்கு இலக்காயிருந்தனன். அந்த திவ்விய தம்பதிகளின் திருவுள்ளமே ஒன்றுக்கொன்று பேசிக்கொண்டிருந்தது என்னும்படியாக அத்துணை ஒத்த மனத்தராயிருந்தனர்.

ஸ்ரீ மஹாவிஷ்ணுவும் ஸ்ரீ மஹாலக்ஷ்மியும் கூடியிருக்கின்றார்களென்னும்படியாகவே ஸ்ரீராம ஸீதைகள் கூடிக் களித்திருந்தனர். ... ... ... *

ஸ்ரீகாஞ்சீ அண்ணங்கராசாரியரியற்றிய வால்மீகி ராமாயண மொழிபெயர்ப்பில்
பாலகாண்டம் முற்றிற்று.

ஸ்ரீஸீதா லக்ஷ்மணபரத சத்ருக்நஸமேத ஸ்ரீராம சந்த்ர பரப்ரஹ்மணே நம:

எம்பெருமானாரும் ஸ்ரீ வைஷ்ணவர்களுமெழுந்தருளாநிற்கப் பெரியநம்பி தெண்டனிட்டுக்கிடந்தார்: நம்மை இங்ஙனே செய்தருளிற் றென்? என்று கேட்க, ஆளவந்தாரெழுந்தருளுகிறாரென்றிருந்தேன் என்றருளிச் செய்தார்.

(கூர்வேல் கொடுந்தொழிலன்) நமக்கு அவனை நோக்கித் தருமவனைச் சொல்லுங்கோளென்கிறார்கள். சிறியாத்தானைப் போலே பசும்புல் சாவமிதியாதவர் பிள்ளைபிறந்தவாறே வேலைப் புகரெழக் கடைய விட்டாராய்த்து.

(இளஞ்சிங்கம்) சிங்கக் குருகு என்று ஆழ்வான் வார்த்தை.

## திருப்பாவை 2. வையத்துவாழ்வீர்காள்.

ஆறாயிரப்படி. (வையத்துவாழ்வீர்காள்)........இப்படி வ்யதிரேகத்தில் முடியும்படியானவன் [தசரத சக்ரவர்த்தி] மோக்ஷம் பெறுதொழிவானென்? என்று நஞ்சீயர் பட்டரைக் கேட்க; இவனுக்குள்ளது நரகமே; பெருமாளாந்ருசம்ஸ்யத்தாலே ஸ்வர்க்கஸ்தனானான் என்றருளிச் செய்தார்.

[குறிப்பு ;—தசரத சக்ரவர்த்தியானவன் ஸத்யஸந்தனென்று பேர்படைத்தாலும், ஆபாஸமான ஸத்ய தர்மத்தைப் பற்றிநின்று, இராமபிரானோடு கூடிவாழ்தலாகிற பெரும் பேற்றையிழந்தான். கைகேயிக்கு என்றைக்கோ கொடுத்திருந்த வரத்தை நிறைவேற்றாவிடில் பொய் சொன்ன பாவத்திற்காக நரகம் வந்துவிடுமேயென்று அஞ்சினான் தசரதன்; * யஸ் த்வயா ஸஹ ஸ ஸ்வர்க்கோ நிரயோ யஸ் த்வயா விநா * என்று அந்த ஸ்ரீ ராமாயணத்திலேயே யுள்ள ஸித்தாந்தப்படி இராமபிரானை விட்டுப்பிரிவதே நரகம், அவனோடு கூடியிருப்பதே ஸ்வர்க்கம் என்று உண்டாகவேண்டிய பிரதிபத்தி அத்தயரதனுக்கு அடியோடு உண்டாகவில்லை. ததிபாண்டன் கண்ணனை மறைத்திட்டுவைத்து யசோதையிடம் உன் மகன் இங்கில்லை யென்று பொய் சொல்லி மோக்ஷம்பெற்று விட்டான்; தசரதன் ஸத்யமே நடத்தியும் ஸித்ததர்மத்தைக் கை விட்டு ஆபாஸதர்மரக்ஷணத்தில் ஊன்றினபடியாலே இழந்தான். முமுக்ஷுப்படியில் சரமச்லோகப்ரகரணத்தில் "சக்ரவர்த்தியைப் போலே இழக்கைக்கு உறுப்பு" என்றருளிச் செய்ததும் இங்கே அநுஸந்தேயம்.]

(ஆறாயிரப்படி.) (செய்யாதன செய்யோம்) ஆழ்வான் 'எங்கள் பூர்வர்கள் தேவதாந்தர பஜனம் பண்ணுமையாலே' என்றானாம்.

(முக்கியமான பிழைதிருத்த மொன்று. * பாற்கடலுள் பையத் துயின்ற * என்றவிடத்து மூவாயிரப்படியில் "ஜகத்ரக்ஷணசிந்தையிலே அவகாஹிதனாய்" என்றுள்ளது. மேலேயும் "ஆராலே ஆருக்கு என்ன நலிவு வருகிறதோ வென்று அதிலே அவகாஹிதனாய்க் கொண்டு சாய்ந்தபடி—என்றுள்ளது. இரண்டிடத்திலும் 'அவகாஹிதனாய்' என்றது அச்சுப்பிழை; அவஹிதனாய் என்பதே சுத்தபாடம். வடமொழியில் அவகாஹிதனென்ற சொல்வடிவம் தேராது.)

## திருப்பாவை 3. ஓங்கியுலகளந்த.

(ஆறாயிரப்படி.) (ஓங்கி)........ஸ்ரீ வைகுண்டத்திலிருக்கும்போது ஸம்ஸாரிகளுடைய இழவுக்குத் திருவுள்ளம் நொந்திருக்கு மென்று பட்டருளிச் செய்ய, சிலர் அத்தைக்

கேட்டு " அவாப்தஸமஸ்தகாமனாய் நிரதிசயாநந்த யுக்தனாயிருக்கிற ஸர்வேச்வரனுக்கு ஒரிழவுண்டோ திருவுள்ளத்தில் ?" என்ன, * வ்யஸநேஷு மநுஷ்யாணாமென்கிறது குண ப்ரகரணமோ தோஷப்ரகரணமோ ? என்றருளிச் செய்தார்........

மாறனேரியிலே ராமாநுஜதாஸனென்பாரொருத்தர் அவன் வருகிறபடியைக் கண்டு கடக்கப் போவென்பதே ! நாலடி விலங்கிப்போதல், இல்லையாகில் ஒரு முழுக்கிட்டுக் கொள்ளுதல் செய்யவன்றோவடுப்பது என்ன ; சண்டாளனே யாகிலும் அவன் ஆர்த்தனான ஸமயத்தில் அல்லாதார் விலங்கிப்போவார் ; த்விஜனாகில் அவன்விலங்குவான் என்று விதி விசேஷித்த அம்சம் அழிந்ததேயென்று அவர் சொல்ல, கெடுவிகாள் ! விதிபூர்வகமாயோ க்ருபையிருப்பது ! என்றருளிச் செய்தார்.

[விவரணம் :—மாறனேரி யென்கிற வூரிலே ஒரு ஸ்வாமி வழி நடந்து சென்று கொண்டிருக்கையில் எதிரே ஒரு பஞ்சமன் வந்தான் ; அவன் தீண்டாதானாகையாலே இந்த ஸ்வாமியானவர் அவனை விலகிப்போம்படி அதட்டுகிறார் ; அவன் இந்த ஸ்வாமியை விலகிப்போம்படி சொல்லுகிறான் ; ஒருவரும் விலகாமல் இப்படியே விவாதம் வளர்ந்து கொண்டிருக்கையில், அங்கு அருகேயிருந்த வொரு ஸ்வாமியானவர் விவாதப்படுகிற ஸ்வாமியை நோக்கி ' அவனோடு எதற்காக இவ்வளவு விவாதம் ? தேவரீரே விலகிப் போனாலென்ன ? விலகிப்போக இடமில்லையாகில் கண்ணைமூடிக்கொண்டு போய்விட்டு ஒரு முழுக்கிட்டுக் கொள்ளலாகாதோ ?' என்றாராம். அதற்கு அவர், ' தேவரீர் சொல்லுவது உண்மையே ; எதிரே வருகிற பஞ்சமன் தலையில் விறகு சுமை முதலான பாரங்களைச் சுமந்து வந்தானாகில் அப்போது அந்தணன் விலகிப்போகக்கடவனென்றும், பஞ்சமன் தலைச்சுமையொன்றுமின்றிக்கே கை வீசி வருபவனாயிருந்தால் அந்தணனை விலகிப்போகச் சொல்லாமல் அவன்றானே விலகிப்போகக் கடவனென்றும் சாஸ்திரக் கட்டளையிருக்கிறதே; அப்படியிருக்க, இப்போது தலைச்சுமை யொன்று மின்றியே வருபவனான இந்த பஞ்சமன் தான் விலகிப் போகாமல் என்னை எதுக்கு விலகச் சொல்லுகிறான் ? என்று பிணங்கினாராம். அதன்மேல் அந்த மத்யஸ்த ஸ்வாமி ஸாதித்த வார்த்தை ;— ஸ்வாமிந் ! தேவரீர் சொல்லுகிற சாஸ்த்ரார்த்தம் யதார்த்தமே ; அதில் குறையொன்றுமில்லை. ப்ரக்ருதம் சாஸ்த்ரத்தைக் கொண்டு விவாதப்படுவானேன்? கருணையினாலே தேவரீர் விலகிப் போனால் இதை சாஸ்த்ரம் தடுக்குமோ ? என்று.]

## திருப்பாவை 4. ஆழிமழை. (அவதாரிகை)

(ஆறாயிரப்படி.) "த்ரவந்தி தைத்யா: ப்ரணமந்தி தேவதா:" என்கிறபடியே பகவத்ஸமாச்ரயணம் பண்ணுவார்க்கு தேவதைகள் வந்து குடநீர்வார்க்கக் கடவரிறே. "அவைதான் ஸ்ரீ வைஷ்ணவர்களை அநுவர்த்தியாதொழிவதென்? என்று கேளாய்" என்று ஆழ்வான்.

[விவரணம்;—ஸ்ரீ வைஷ்ணவர்களைக் கண்டு அசுரர்கள் அஞ்சி நடுங்கியோடுவதாகவும் தேவர்கள் அர்க்யபாத்யாசமநீயங்கள் ஸமர்ப்பித்து வழிபடுவதாகவும் சாஸ்த்ரம் சொல்லிற்று; இங்கே கூரத்தாழ்வான் ஸாதிப்பது—அசுரர்கள் அஞ்சி யோடுவானேன்? தேவர்களைப்போலே இவர்களும் வந்து வணங்கி வழிபாடுகள் செய்து உஜ்ஜீவித்துப் போகலாகாதோ என்று.]

அப்பாட்டிலேயே, "ஊழிமுதல்வனுருவம்போல்" என்றவிடத்து ஆறாயிரப்படியில் "நாச்சியார்விழிவிழிக்க வொண்ணாதாப்போலே" என்றுள்ளது. " நாச்சியார்விழிவிழிக்க

வொண்ணுதென்ருப்போலே" என்றும் சில ஸ்ரீ கோசங்களில் பாடங்காண்கிறது. இரண்டு வகையான பாடத்திலும் ஓர் ஐதிஹ்யம் கர்ப்பிதம். அதாவது, திருவரங்கம் பெரிய கோயிலில் பகற்பத்து முடிவுநாளிரவு ஸ்ரீ ரங்கநாதன் நாச்சியார் திருக்கோலம்பூண்டு ஸேவை ஸாதித்தருள, பட்டர் எழுந்தருளி மங்களாசாஸனம் செய்யும்போது பெருமாளை நோக்கி "தேவரீர் நாச்சியாருடைய வேஷத்தை ஏறிட்டுக்கொண்டதத்தனையொழிய அவள்போல் விழி விழிக்க உம்மாலாகாதே" என்ருராம்.

## திருப்பாவை. 5. மாயனைமன்னு. (ஆருயிரப்படி)

(துறைவன்.) கம்ஸ பயத்துக்கு அஞ்சி ஒளிக்க வந்து சேர்ந்தாரைச் சொல்லுமா போலே சொன்னபடி பாரீர் என்று பட்டர்.

(குறிப்பு;—மேலே "கம்ஸபயத்துக்கு அஞ்சி" என்ற விடத்தில் 'கம்ஸனபாயத்துக்கு அஞ்சி' என்பது சுத்த பாடமென்பர் பெரியோர்.)

அவ்விடத்திலேயே, (தாமோதரனை.) பணைகளிலே தாம்பினவாறே உடை நழுவத் தழும்புகண்டு இடைச்சிகள் சிரித்தார்கள்; அத்தழும்பு தோன்ருமைக்கிறே நம்பெருமாள் கணையம்மேல்சாத்து சாத்துகிறது என்று ஜீயர்.

## திருப்பாவை பா. 6. புள்ளுஞ்சிலம்பினகாண்.

(மூவாயிரப்படி.) (புள்ளும்சிலம்பின்காண்) இவ்விடத்திலே பிள்ளைப்பிள்ளையாழ்வான் பகவத்ஸமாச்ரயணத்துக்கு அநுகூலமான காலத்தை ஸூசிப்பிக்கிற பக்ஷிநாதமல்லது இவ்வாத்மாவுக்கு உத்தேச்யமில்லை யென்று பணிக்குமென்றருளிச்செய்வர்.

அப்பாட்டிலேயே (பிள்ளாய் என்ற விடத்து, மூவாயிரப்படியில்)—பட்டர், திருவாய்ப்பாடியிலுள்ளாரில் சிந்தயந்தியோபாதி க்ருஷ்ணஸம்ச்லேஷத்தில் புதியாரில்லை என்றருளிச் செய்வர்.

(குறிப்பு:—க்ருஷ்ணுவதாரத்தில் ராஸக்ரீடா ஸமயத்தில் திருக்குழலோசையைக் கேட்ட ஆயர்மாதர் ஸ்ரீ ப்ருந்தாவனத்தேறப்போகப் புறப்பட்டவளவிலே மாமியார் மாமனர்களது கட்டளையை மீறிப் போவார் சிலரும் அதற்கு அடங்கிநிற்பார் சிலருமாயிருக்க, ஓர் ஆய்ப்பெண் மாமனரை மீறிப்போகமாட்டாமல் உள்ளடங்கி நின்று அந்த வேணுகான கோஷ்டியிலேயே தான் கலந்திருப்பதாகப் பாவனை முற்றிக் கண்ணபிரானைத் தியானம் பண்ணி அவனிடத்தே நெஞ்சு பதிந்திருக்கையாலே வந்த நிர்மலஸுகத்தாலும், உண்மையில் அவனைக் கிட்டப்பெருமையாலுண்டான அளவற்ற துக்கத்தாலும் ஸகலபுண்ய பாபங்களும் கழியப்பெற்று அவனைப்பெருது தரிக்கமாட்டாமல் மூச்சடங்கி அவளுடைய தேஹமும் தன்னடையே வீடுபெற்றது. இந்த ஆய்ப்பெண்ணுக்கு ஒரு பெயர் கூறப்படவில்லை; இவளைப்பற்றி ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் சொல்லப்புக்க விடத்தில் "காசித்" என்று தொடங்கி "சிந்தயந்தீ ஜகத்ஸூதிம் பரப்ரஹ்மஸ்வரூபிணம், நிருச்ச்வாஸதயா முக்திம் கதாந்யா கோபகந்யகா" என்று கூறப்பட்டிருத்தலால் 'சிந்தயந்தீ' என்ற குணநாமத்தால் இவளை நம் பூருவாசாரியர்கள் வியபதேசித்தருளினர். இவ்விடைப்பெண் "எங்குங் காவலுங் கடந்து கயிறு மாலையாகி வந்து கவிழ்ந்து நின்றனரே" என்றபடி காவல் கடந்து போகமாட்டாமே மாமியார் மாமனர்களைக்கண்டு திடுக்கிட்டு நிற்கும்படியாலே இவள் கிருஷ்ணனிடத்து

ஈடுபாட்டில் புதியள் என்பர் பட்டர். பழகியிருந்தால் தேங்காதே போகத் துணிந்திருப்பாளன்றோ.]

## திருப்பாவை 7 கீசுகீசு—அவதாரிகை.

(ஆருயிரப்படி.) ஆட்கொண்டவில்லி ஜீயர் எழுந்தருளா நிற்கச் செய்தே நஞ்சீயர் தெண்டனிட்டு நிற்க, 'பகவத் விஷயத்தில் ருசி நமக்கு மெய்யாகப் பிறந்ததில்லைகாணும்' என்றருளிச் செய்ய, 'உம்மைப்போலே ஆசார்யவான்களுண்டோ ? இங்ஙனே யருளிச் செய்வதென் ?' என்ன ; , பகவத் விஷயத்திலே மெய்யே ருசியுண்டென்றிருக்கையாவது—பாகவதர்களைக் கண்டால் உகக்குமன்று காணும்' என்றருளிச் செய்தார்.

[குறிப்பு ;—ஆட்கொண்டவில்லி ஜீயரென்பவர் எம்பெருமானார் திருவடிகளில் ஆச்ரயித்தவர்களில் ஒருவர் ; அவர் நஞ்சீயர் காலத்திலும் எழுந்தருளியிருந்தார். அவர் ஒரு நாள் நம்பெருமாளை மங்களாசாஸனம் செய்துவிட்டுத் திரும்புகையில் நஞ்சீயர் அவரைத் தெண்டனிட்டு நல்வார்த்தை கேட்டருளுகையில், "எம்பெருமான் திறத்தில் நமக்கு மெய்யான ருசி உண்டாகவில்லையே" என்று அவர் குறையுடன் பணித்தாராம் ; அதைக் கேட்டு நஞ்சீயர், 'தேவரீரும் இப்படி ஸாதிக்கலாமோ ? ஸாக்ஷாத் எம்பெருமானார் திருவடிகளில் ஆச்ரயிக்கும் பாக்கியம் பெற்ற தேவரீருக்கு பகவத் விஷயத்தில் மெய்யான ருசி யில்லை என்னப்போமோ ?' என்றாராம். அதற்கு அவர் அருளிய மறு மாற்றம்—'நாம் எம்பெருமான் ஸன்னிதிக்குப் போய்வருகிறோம் ; அப்பெருமானை ஸேவித்து வருகிறோம், அவனது வடிவழகிலீடுபட்டுக் கண்ணீர் பெருக்குகிறோம் என்பதெல்லாம் வாஸ்தவமே ; பாகவதர்களைக்கண்டால் நிலாத்தென்றல் சந்தனம் புஷ்பம் முதலானவற்றைக் கண்டாற்போல் உகந்திருக்கப் பெற்றாலன்றோ பகவான் திறத்தில் நமக்கு உண்மையான ருசி யுண்டாகப் பெற்றதாவது ; அது இல்லையே ! ஆதலால் சொன்னேன்' என்று. இதனால், பாகவதர்கள் விஷயத்தில் ப்ரதிபத்தியுண்டாவது மிகவுமரிது—என்றதாயிற்று.]

## திருப்பாவை. 8. கீழ்வானம் (ஆருயிரப்படி.)

(கோதுகலமுடைய பாவாய்) "மூலையெழுந்தார்படி மோவாயெழுந்தார்க்குத் தெரியாதிறே என்று பட்டர்.

(இவ்வைதிஹ்யம் நாச்சியார் திருமொழியில் (13—1.) * பெண்ணின் வருத்தமறியாதபெருமான் * என்றவிடத்து வியாக்கியானத்திலு முள்ளது. "முலையெழுந்தார்படி மோவாயெழுந்தார்க்குத் தெரியாதிறே யென்று பட்டரருளிச் செய்தாராக ப்ரஸித்தமிறே" என்றுள்ளது அங்கு. மோவாயெழுந்தார்—மீசை முளைத்தவர்கள் என்றபடி.)

## திருப்பாவை 9. தூமணிமாடத்து. (ஆருயிரப்படி)

(தூமணிமாடம்.) ஆழ்வான் "ஹிதாம்சத்துக்கு ஒரு வைஷ்ணவனுடைய க்ருஹ யாத்ரையை யநுஸந்திக்கவமையும்" என்றாப்போலே (இவர்களும் இவளுடைய மாளிகையி லழகை அநுபவிக்கிறார்கள்.)

அவ்விடத்திலேயே. (துயிலணைமேல் கண்வளரும்.) பட்டர்க்குச் சிலர் 'தொண்டனூர் நம்பி திருவடிச்சார்ந்தார்' என்று விண்ணப்பஞ் செய்ய, "அவர் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு அடிமைசெய்து போந்தபடிக்கு, திருநாட்டுக்கு நடந்தா ரென்று சொல்லவேண்டாவோ ?" என்றருளிச் செய்தார். நம்பியேறு திருவுடையார் தாஸரிடையாட்டமாகவும் நஞ்சீயர் இப்படியருளிச் செய்தார்.